இராமஜயம்.

# நம்பாடுவார் சரித்திரமென்னும்

# கைசிக வேகாதசி புராணம்.



இது,

கடகபந்திரி-வரதப்பநாயுடுவின் குமாரரும்,
சென்னை - பச்சையப்ப முதலியார் கலாசாலைத்
தமிழ்ப் பண்டிதருமாகிய
க - வ - திருவேங்கட நாயுடுவினால்
இயற்றப்பெற்றது.



சென்னை, முத்தியாலுப்பேட்டை
எஸ். மூர்த்தி அண்டு கோ.
கபாலிபிரஸ்.
பிலவங்க ௵ சித்திரை-மீ

1907.

ஸ்ரீ

# சிறப்புப் பாயிரம்.

சென்னை, புதுவண்ணாரப்பேட்டை

வித்யாவிருத்திநிலய பாடசாலையின் உபாத்தியாயர்

மகா-ள-ள-ஸ்ரீ

சே. சூரப்ப நாயடு சொல்லிய

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

மின்னொன்று மெயில்புடைசூழ் குறுங்குடியின் முகுந்தனரு
மேவப் பெற்ற, கொன்னொங்கு நம்பாடு வார்சரித மியற்றமிழிற் (
வத் தந்தான், மன்னொங்குங் குணவாளன் சித்திரகூ டத்தெம்ம
மலர்த்தாட் கன்புன், றென்னொங்கு விபுதர்புகழ் திருவேங்க டக்
ருச் சீரி யோனே.

ஸ்ரீ

# முகவுரை.

அகரவக் கரம்போ லமர்ந்துறை பரம
னிகருஞ் செவ்வியி னிகழ்மலர்ப பதங்களு
மென்று வகத்து மிருந்திட விழைஇய
செந்நா மடந்தைதன் சேவடித் துணைகளும்
பம்புமென் னகததிருள் பரிதியிற் பாற்றியே
செம்பொருட் டிறங்களைச் செவ்விதிற் றெரிவித்
தொருமைநன் னெறியினி லுய்த்தெழிற் சிதம்பர
மருவிரா மலிங்க மாதவன் கழல்களும்
வணங்கியும் வாழ்த்தியு மணங்கற நினைத்து
மிணங்கிய வறிஞர்முன் னியம்புவன் சிலவே.

கைசிகபுராணமென்னும் இந்நூல் வியாசமுனிவரா லருளிச் செய்யபபெற்ற பதினெண்புராணங்களுள் வராகபுராணத்தில் பதி னொன்றாமத்தியாயத்தின்க ணுள்ளதோர் திவ்விய சரித்திரத்தை யுட் கொண்டது. இச்சரித்திரம் பிரளயசலத்தில் மூழ்கிக்கிடந்த பூப பிராட்டியாரை வெளிப்படுத்திய வராகப்பெருமாள், அப்பிராட்டிக்கு இசை வைபவத்தை இயம்பியருளியபோது அதற்குக் காட்டாக வுணர்த் தபபட்டது. எனவே, இந்நூற்கு வகதா வராகப்பெருமாள்; சுரோதா பூப்பிராட்டியார் என்பதாயிற்று. இதற்குக் கைசிகபுராணமெனப் பெயர் போந்ததென்னெனின், பாண்டியநாட்டில் ஆழ்வார்கள் மங்களா சாஸநம்பெற்ற திருமாலிருஞ்சோலைமலை திருக்கோட்டியூர் திருமெய் யம் திருபபுல்லாணி திருத்தண்கா திருமோகூர் திருக்கூடல் (தென் மதுரை) ஸ்ரீவில்லிபுத்தூர் திருக்குருகூர் (ஆழ்வார்திருநகரி) தொலை வில்லிமங்கலம் ஸ்ரீவரமங்கை (வானமாமலை) திருப்புளிங்குடி திருப பேரை ஸ்ரீ வைகுந்தம் வரகுணமங்கை திருக்குளந்தை (பெருங்குளம்) திருக்குறுங்குடி திருக்கோளூர் என்னும் பதினெண் திருப்பதிகளுள்

ஒன்றான திருக்குறுங்குடியென்னுந் திருப்பதியில் இசைத்தொண்டினை யியற்றி வந்த நம்பாடுவானென்னும் பரமபாகவதோத்தமரைப் பக்ஷிக்கக்கைப்பற்றிய பிரமராக்கதனுக்குத் தாம் திருமாலைக்குறித்துப் பாடிய பச்சிமமென்னும் பண்ணில் கைசிகமென்னும் ஒரு ஸ்வரத்தின் பலனையீந்து அவனை யீடேற்றித் தாமும் அதனானே பரமபதமடைந்தமையைவிளக்கலின் அவ்விசைக்காரணமாக இப்பெயர் போந்ததென்க.

இதில் பெருமான் திருக்கோயிலில் திருவலகிடல் திருமெழுக்குத்தீற்றலாதியவற்றின் விசேடங்களும், வாய்மையின் றூய்மையும், பாவகாரியங்களின் றிறங்களும், சரணாகதியடைந்தோரைப் புரத்தலும், பாகவதோத்தமரது பெருமைகளுங் கூறப்பட்டனவேயன்றிக் கார்த்திகைமாதச் சுக்கிலபக்ஷ ஏகாதசிமான்மியமும் நன்குகூறப்பட்டிருக்கின்றது. ஏகாதசிவிரதம் ஒவ்வொருமாதத்திலும் பக்ஷபேதத்தால் இருகூறாகி வருடத்தில் இருபத்துநான்காய், அதிக ஏகாதசியிரண்டுடன் இருபத்தாறாய் விளங்குகின்றது. இவ்வேகாதசிகளின் வைபவங்களும் அனுஷ்டிப்புமுறையும் அனுஷ்டித்தோர் காதைகளும் பிறவும் பண்டிதர் தாமோதரவியாசு என்பவராற் பலபுராணங்களிலிருந்து திரட்டி அச்சிடப்பெற்ற வடமொழிபபுராணத்துள் தெள்ளிதின் விளங்குகின்றன. அவற்றின் சுருக்கத்தை ஈண்டுக் கூறுவேன்.

க-வது. மார்கழிமாதக் கிருஷ்ணபக்ஷ ஏகாதசி.

கிருதயுகத்தில் சந்திரவதி என்னும் பட்டணத்தில் அரசுபுரிந்த நாடீஜங்கன் என்னும் தைத்தியனுடைய குமாரனான மரு என்பவன் மிக்க பலவானாதலால், அவன் இந்திரனைவென்று, சுவர்க்கத்தைக் கைக்கொண்டு அரசுபுரிந்துவந்தனன். இந்திரன் புகலிடமின்றி வருந்தி விஷ்ணுவைச் சரண்புக, அவர் அத்தைத்தியனை யெதிர்த்து, வெல்ல முடியாதவர்போல் நடித்துப்புறந்தந்து, ஒருமலைக்குகையுண் மறைந்து திருக்கண்வளர்ந்தனர். அங்குச்சென்று அவரை வருத்திய அத்தைத்தியனை அம்மூர்த்தியின் திருமேனியில். அவரிச்சையிற்றோன்றிய ஒருகன்னிகை யெதிர்த்துவென்று, இந்திரன் மனக்குறையை மாய்த்தனள். ஏகாதசி திதியிற்றோன்றினமையின் அக்கன்னிகைக்குப் பெருமான் ஏகாதசி என்று பெயர்சூட்டி, “ இத்தினத்தில் நம்மைக்குறித்து

விரதமநுஷ்டிப்பார்க்கு நாம் சகல போகங்களையுமளித்து, இறுதியில் நமதுலகையும் பாலிபபம்" என்று வரந்தந்தனர். எனக் கிருஷ்ணபகவான் அருச்சுனனுக்குத் திருவாய்மலர்ந்தருளினதாகப் பவிஷ்யோத்தரபுராணங் கூறுகின்றது.

உ-வது. மார்கழிமாதச் சுக்கிலபக்ஷ ஏகாதசி.

இதற்கு மோக்ஷதையென்று பெயர். இத்தினத்திற்றான் பகவான் முரன் என்னுமசுரனை வதைத்தது. இதிகாசம்:—பூர்வம் சோகுலத்தில் அரசபுரிந்துவந்த வைகாநஸன் என்னும் இராஜருஷி ஒருநாளிரவில் தன்பிதா நரகத்திலிருந்து வருந்துவதாகக் கனவுகண்டு பரிதபித்து, அதன்காரணமுணர விருப்புற்றனன். பின்னர் அந்தணரிட்ட கட்டளைப்படி அந்நகரத்துக்கடுத்த ஆரணியத்துள் வசிக்கும் பருவதமுனிவரையடைந்து, கனவின்றிறத்தைநவில, அவர் ஞானத்தாலுணர்ந்து, "உன்றந்தை தனக்குரிய பல மனைவியரையும் ஒப்பநாடாத பக்ஷபாதத்தால் அருநரகடையலாயினன்" என்றுரைக்கவுணர்ந்து, அதன்.தீர்வுக்காக அவருணர்த்தியபடியே இவ்விரதத்தையநுஷ்டித்து, அப்புண்ணியத்தைப் பிதாவுக்களித்து, அவனைச் சுவர்க்கத்துக் கேற்றினார். என்று கிருஷ்ணபகவான் தருமநந்தனருக்குத் திருவாய்மலர்ந்ததாகப் பிரமாண்டபுராணம் புகலுகின்றது.

ங-வது. தைமாதக் கிருஷ்ணபக்ஷ ஏகாதசி.

இதற்கு ஸபலம் என்றுபெயர். இதிகாசம் :—பூர்வம் சம்பாவதி என்னும் நகரத்தில் அரசுபுரிந்துவந்த மகிஷ்மான் என்னும் அரசனுடைய மூத்தகுமாரன் லும்பகன் என்பான் மிக்க பாவியாய்த் துராசாரனும் ஹிம்ஸகனுமிருந்தமையால், அரசனால் வெறுக்கப்பட்டு ஆதரவின்றி யடவிசார்ந்து வருந்துவானாயினன். ஒருநாள் அவன் ஆகாரத்துக்கெனத் தேடிய பழங்களைத் தானடவியடைய எற்பட்டதே யென்னும் வெறுப்பினா லுண்ணாது "இது நாராயணனுக்குப் பிரீதியாகுக" என்றுவீசி, அன்றிரவுமுற்று முண்ணாதும் உறங்காதுமிருந்தனன். அத்தினம் இவ்விரததினமாகையால் அபுத்தியாற் செய்த காரியத்தையும் பெருமானுகந்து, அவனுக்கு நல்லுணர்வுநல்கி அரசினையடைய

அநுக்கிரகித்து இறுதியில் தமதுலகத்தையுமருளினர். என்று கிருஷ்ணபகவான் யுதிஷ்டிரருக்குத் திருவாய்மலர்ந்தருளினதாகப் பிரமாண்டபுராணம் பேசுகின்றது.

௪-வது. தைமாதச் சுக்கிலபக்ஷ ஏகாதசி.

இதற்குப் புத்திரதை என்றுபெயர். இதிகாசம்:—பூர்வம் பத்ராவதி என்னும் பட்டணத்தில் அரசுபுரிந்துவந்த சுகேதுமந்தன் என்னுமரசன் சைப்யை என்னும் மனைவியோடு வாழ்ந்துவருங்காற் புத்திரனில்லாக்குறையாற் கவலையுற்று அருந்தவஞ்செய்து மகப்பேறடையக்கருதி வனமடைந்தனன். அங்குப் புண்ணியதீர்த்த ஸ்நானத்திற்காக வந்த ஒரு முனிபுங்கவரைக்கண்டு வணங்கித் தன் குறையைக் கூறி, அவரால் இவ்விரத விசேடமுணர்ந்து, தனது நாட்டையடைந்து அதனை அநுஷ்டித்து ஸத்புத்திரனைப் பெற்றனன். என்று கிருஷ்ணபகவான் தருமநந்தனருக்கு அநுக்கிரகித்ததாகப் பவிஷ்யோத்தரபுராணம் பகருகின்றது.

௫-வது. மாசிமாதக் கிருஷ்ணபக்ஷ ஏகாதசி.

இதற்கு ஷஷ்டிலம் என்றுபெயர். இது பலவிதமான தானதருமங்களைச் செய்தற்குரியது. இதிகாசம்:—பூவுலகில் ஒரு பிராமண ஸ்திரீ பல விரதாநுஷ்டானங்களைச் செய்பவளாயிருந்தும் யாசகர்க்கு அன்னமாத்திரம் இடாதவளாயிருக்க; அவளைச் சோதிக்குமாறு நாராயணனே ஒரு பிக்ஷுகனுய்வந்து யாசிக்கவும், அப்பிக்ஷாபாத்திரத்தில் ஒரு மண்ணுங்கட்டியைப் பரிகாசமாக அவள் இட்டனள். மண்ணுங்கட்டியேனும் பெருமாளுக்கிட்ட விசேடத்தால் அவள் சின்னாளிலிறந்தபின்பு சுவர்க்கம்புக்குத் தன தானியாதிகளில்லாத வெறும்வீட்டினைமாத்திர மடைய; உணவின்றி வருந்திய அவள் விஷ்ணுவை உபாசித்து அவரால் பூர்வஜன்ம பாபத்தை யுணர்ந்து, அவருணர்த்தியபடி தனது வீட்டிற்குவந்த தேவகன்னிகைகளால் இச்சஷ்டில ஏகாதசி மிகப்புண்ணியவிரதமெனத்தெரிந்து, அதை அநுஷ்டித்துச் சகலைசுவரியத்தையுமடைந்தனள். என்று நாரதருக்குக் கிருஷ்ணபரமாத்மா கூறியபடி தால்ப்பியமுனிவருக்குக் கபஸ்திமுனிவர் கூறினதாகப் பவிஷ்யோத்தரபுராணம் பகருகின்றது.

## கூ-வது. மாசிமாதச் சுக்கிலபக்ஷ ஏகாதசி.

இதற்கு ஜயை என்றுபெயர். இதிகாசம் :—தேவசபையில் கானஞ்செய்துகொண்டிருந்த புஷ்பவதி மாலியவான் என்னும் கந்தருவ ஸ்திரீபுருஷர்கள் ஒருவர்மீதொருவர் காமசித்தராய்த் தாள ஞானந்தவிர்ந்து பாடின குற்றத்தால் இந்திரனாற் சபிக்கப்பட்டுப் பிசாச வடிவமடைந்தனர். அவர் ஒருகாட்டில் ஓரரசவிருக்ஷத்தினடியில் வசிக்குங்கால், அபுத்தியால் இவ்விரததினத்தில் உபவாஸமிருந்து பாவமோசனமடைந்து சுவர்க்கஞ்சென்று தமது பாபமோசன விசேடணத்தை இந்திரனுக்குக்கூறி மகிழ்வித்தனர். என்று கிருஷ்ணபகவான் தருமராஜனுக்குச் சொல்லியருளியதாகப் பவிஷ்யோத்தரபுராணங் கூறுகின்றது.

## எ-வது. பங்குனிமாதக் கிருஷ்ணபக்ஷ ஏகாதசி.

இதற்கு விஜயை என்று பெயர். இதிகாசம்:—ஸ்ரீராமசந்திர மூர்த்தி பகதால்பமுனிவரிடம் கேட்டபடி இவ்விரதமனுஷ்டித்து அப்பலத்தால் கடலைக்கடந்து இராவணவதம் நடத்தினார். என்று பிரமதேவர் நாரதமுனிவருக்குக் கூறியபடி கிருஷ்ணபகவான் யுதிஷ்டிரருக்குக் கூறியருளியதாக ஸ்காந்தபுராணஞ் சாற்றுகின்றது.

## அ-வது. பங்குனிமாதச் சுக்கிலபக்ஷ ஏகாதசி.

இதற்கு ஆமலக ஏகாதசி என்று பெயர். இதிகாசம்:—வைதிசம் என்னும் நகரத்தில் அரசுபுரிந்த சைத்ரரதனென்னும் அரசன் தனதுநாட்டில் அனைவரும் இவ்விரதத்தை அநுஷ்டிக்கச்செய்ய, ஒருநாள் இரவில் ஒருகூலிக்காரன் அவ்விரதங்காரணமாகப் பிறர் நடத்தும் விபவங்களை ஊணுறக்கமின்றிப் பார்த்தபடியிருந்தனன். அன்றையதினம் அவன் ஜாகார உபவாஸஞ்செய்தபலனால் அவன் சகலபோகங்களையும் இம்மையிலேயே பெற்று, மறுமையில் வசுதரன் என்னும் அரசனாய்ச் சனித்து, லக்ஷங்கிராமங்களுக்குத் தலைவனாய் ஆண்டுவந்தனன். ஒருநாள் அவன் வேட்டைக்குச்சென்று வேட்டையாடிக்களைத்துறங்க; அங்கு அவன்பகைவர்கள் இதுவேசமயமெனக் கொல்லஎத்தனித்தபோது ஏகாதசிவிரதபலனைப் பூர்ணமாகப்பெற்றிருக்கிற

அவனது சரீரத்தில் விஷ்ணுவின் மாயாசக்தியான ஒருகன்னிகை
தோன்றி அவர்களையெல்லாங் கொன்றனள். என்று மாந்தாதாவுக்கு
வசிஷ்டமுனிவர் கூறியதாகப் பிரமாண்டபுராணம் பேசுகின்றது.

௯-வது. சித்திரைமாதக் கிருஷ்ணபக்ஷ ஏகாதசி.

இதற்குப் பாபவிமோசனி என்று பெயர். இதிகாசம்:—
சைத்திரரதம் என்னுந் திவ்வியவனத்தில் தவம்புரிந்துகொண்டிருந்த
மேதாவி என்னு முனிவருடைய தவத்தைக்கெடுக்கும்படி இந்திரனே
வலால் வந்து மயக்கிய மஞ்சுகோஷை என்னும் தேவஸ்திரீயை அம்
முனிவர் எழுபத்தைந்து வருடம் நூறுமாதம் மூன்றுநாள்வரையுங்
கூடி இன்பநுகர்ந்து பின்றெளிந்து, "என்றவத்தைக் கெடுத்தவ ளிவ
ளல்லவா"? என்று சினந்து, அவளை "நீ பிசாசாகுக" என்று சபித்தனர்.
பின்னர் அம்மாதுபலவாறு வேண்டிக்கொள்ள இரக்கமுற்று "இவ்விர
தம் அநுஷ்டித்து விமோசன மடைதி" எனக்கூறித் தாமும் தமது
பிதா சிவனமுனிவர் கட்டளைப்படி இவ்விரதமே யநுஷ்டித்துத் தவத்
தைவிட்டு மயங்கிய தமது பாவத்தையும் போக்கிக் கொண்டனர்.
என்று ரோமசமுனிவர் மாந்தாதாவுக்குக் கூறியபடி கிருஷ்ணமூர்த்
தி தருமபுத்திரருக்குக் கூறியதாகப் பவிஷ்யோத்தரபுராணங் கூறு
கின்றது.

௧௦-வது. சித்திரைமாதச் சுக்கிலபக்ஷ ஏகாதசி.

இதற்குக் காதை என்று பெயர். இதிகாசம்:—பாதலத்தில்
அரசுபுரிந்திருந்த புண்டரீகனென்னும் அரவரசன் சபையில் இசை
பாடிக்கொண்டிருந்த லலிதன் என்னும் கந்தருவன் மனையிலிருந்த
தனதுமனைவி லலிதையைநினைத்துக்கொண்டு, காமவிகாரியாய் இசை
தவறி அபஸ்வரங்கலந்தோத; அதனைக் கர்க்கன் என்னும் நாகவரசனு
லுணர்ந்த புண்டரீகன் அக்கந்தருவனை "அரக்கனுகுக" எனச்சபித்த
னன். அதனையுணர்ந்த லலிதை மனங்கலங்கித் தனது நாயகனுக்கு
நேர்ந்த சாபத்துக்குப் பரிகாரந் தேடுவாளாய், விந்தமலையிற் றவம்
பூண்டிருந்த ருசியசிருங்கமுனிவருக்கு விண்ணப்பித்துவேண்டி, அவ
ருரைத்தபடி இவ்விரதமநுஷ்டித்து அப்பலனைப் புருடனுக்குதவி

அவனைச் சாபத்தினின்றும் விடுவித்தனள். என்று திலீபராஜனுக்கு வசிஷ்டர் உணர்த்தியபடி கிருஷ்ணபரமாத்மா தருமதநயருக்கு அருளியதாக வராகபுராணம் வகுக்கின்றது.

கக-வது. வைகாசிமாதக் கிருஷ்ணபக்ஷ ஏகாதசி.

இதற்கு வரூதிநீ என்று பெயர். இவ்விரதம் உருத்திரன் மாந்தாதா துந்துமாரன் முதலியோரால் அநுஷ்டிக்கப்பெற்றதென்றும், இத்தினத்தில் பலவிதமான தானங்களைச்செய்ய அவை அதிகபலனைத் தரத்தக்கவாகுமென்றும், பிதிரர்களுக்குப் பிரீதிதர வல்லதென்றும் கிருஷ்ணமூர்த்தி தருமபுத்திரருக்குக் கூறியதாகப் பவிஷ்யோத்தர புராணம் பகருகின்றது.

கஉ-வது. வைகாசிமாதச் சுக்கிலபக்ஷ ஏகாதசி.

இதற்கு மோகினி என்று பெயர். இதிகாசம்:—ஸரஸ்வதீ நதீ தீரத்தில் பத்ராவதி என்னுநகரில் த்யுதிமான் என்னும் சந்திரவம்சத்தரசன் அரசுபுரியுங்கால், அப்பட்டணத்தில் தனபாலனென்னும் ஒரு வணிகனிருந்தனன். அவனுக்குள்ள குமாரர் ஐவருள் இளையவன் திருஷ்டபுத்தி என்பான் பரமபாபியாகையால், அரசனால் நாட்டைவிட்டுத் துரத்தப்பட்டுக் கங்கையையடைந்து அங்கு ஸ்நானமாடிக் கரையேறிய கௌண்டின்ய முனிவருடைய வஸ்திர ஜலபரிசத்தால் பரிசுத்தனாய், அவர்கூறியபடி இவ்விரதமநுஷ்டித்து முத்தியடைந்தனன் என்று இராமமூர்த்திக்கு வசிஷ்டமுனிவர் கூறியபடி கிருஷ்ணமூர்த்தி தருமராஜனுக் கருளியதாகக் கூர்மபுராணங் கூறுகின்றது.

கரு-வது. ஆனிமாதக் கிருஷ்ணபக்ஷ ஏகாதசி.

இதற்கு அபரம் என்று பெயர். இதில் மகாதானஞ் செய்தவர் பரலோகத்தையடைவார்கள். ஸ்திரீவதை சிசுவதைகளைச் செய்தவர்களேனும் இவ்விரத மநுஷ்டித்தால் அப்பாபங்களை எளிதிற் போக்கிக்கொள்வர் என்று தருமராஜனுக்குக் கண்ணபிரான் கூறியருளினதாகப் பிரமாண்டபுராணம் பகருகின்றது.

### கச-வது. ஆனிமாதச் சுக்கிலபக்ஷ ஏகாதசி.

இதற்கு நிர்ஜல ஏகாதசி என்றும், இதன் துவாதசிக்குப் பாண்டவ துவாதசி என்றும் பெயர். இதிகாசம் :—பீமசேனன் உபவாசமாக விருந்து ஏகாதசி விரதமநுஷ்டிக்க முடியாதென வேண்ட, வியாசர் ஏகாதசி மகாத்துமியத்தையருளிச்செய்து அவசியம் இது செய்யத்தக்கதென வற்புறுத்த, அவன் அநுசரித்துப் பலவித விசேஷங்களையடைந்தனன் என்று கிருஷ்ணபகவானிடம் கேட்டபடி வியாசர் பீமனுக்கு அருளியதாக பிரமவைவர்த்தபுராணம் பேசுகின்றது.

### கரு-வது. ஆடிமாதக் கிருஷ்ணபக்ஷ ஏகாதசி.

இதற்கு யோகினி என்று பெயர். இதிகாசம் :— குபேரனுக்கு நித்தியமும் சிவபூசைக்குப் புஷ்பங்கொணர்ந்துதரும் ஹேமமாலி என்பவன் சிவபூசனைக்குரிய காலத்தி லதனைத்தராது தனது மனைவி சுந்தரியினிடங்கூடி மகிழ்ந்திருக்க ; புஷ்பமில்லாது பூஜாகாலந் தவிர்ந்த குபேரன் குபிதனாய் அவனைக் குஷ்டனாகச் சபித்தனன். ஹேமமாலி விசனமுற்று இமபர்வதத்தில் வசித்துக்கொண்டிருக்க ; அங்குத் தவஞ்செய்துகொண்டிருந்த மார்க்கண்டேயமுனிவர் ஒருநாள் அவனைக் கடாக்ஷித்து இவ்விரத விசேஷத்தை யருள ; அதின்படி அவனநுசரித்து ரோகநிவர்த்தியடைந்தனன் என்று தருமபுத்திரருக்குக் கிருஷ்ணபகவான் திருவாய்மலர்ந்தருளியதாகப் பிரமவைவர்த்தபுராணங் கூறுகின்றது.

### கசா-வது. ஆடிமாதச் சுக்கிலபக்ஷ ஏகாதசி.

இதற்குப் பதுமை என்று பெயர். அன்றியும் விஷ்ணு சயனங்கொள்ளுந்தினம் ஈதாகையால் இதற்குச் சயநேகாதசி என்றுங் கூறுவர். இதிகாசம் :—மாந்தாதா தனது நாட்டில் மூவாண்டு மழையின்மையால் வருந்தி, ஆங்கீரசமுனிவரிடம் விண்ணப்பித்து, அவர் அநுஞ்ஞையின்படி இவ்விரத மநுஷ்டித்து மழைவருஷிக்கச் செய்துகொண்டனனென்று கூறி, மேலும் பலவித தருமவிசேஷங்களையும் சாதுர்மாத விரதம் அநுஷ்டிக்கவேண்டிய காலமிதுவென்றும் அதன் மான்மியங்களையும் பிரமதேவர் நாரதமுனிவருக்குக்கூறினர். இதனைக்

கிருஷ்ணமூர்த்தி தருமநந்தனருக்குக் கூறியருளினதாகப் பவிஷ்யோத்தரபுராணம் பகருகின்றது.

## கஎ-வது. ஆவணிமாதக் கிருஷ்ணபக்ஷ ஏகாதசி.

இதற்குக் காமிகை என்று பெயர். இது பாபஹரிதமாக்கும் உத்தமவிரதமென்றும், இதில் விஷ்ணு சந்நிதியில் தீபாவலிகளை வைத்துப் பூஜிக்கவேண்டுமென்றும், பிரமதேவர் நாரதருக்குக் கூறியவாறு தருமபுத்திரருக்குக் கிருஷ்ணபகவான் சொல்லியருளினரென்று பிரமவைவர்த்தபுராணம் பேசுகின்றது.

## கஅ-வது. ஆவணிமாதச் சுக்கிலபக்ஷ ஏகாதசி.

இதற்குப் புத்திரதை என்று பெயர். இதிகாசம் :—மகிஷ்மதி பட்டணத்தின் அரசனான மஹீஜித் என்பவன் புத்திரப்பேறின்மையால் வருந்தித் தனது மந்திரி புரோஹிதர்களை இதற்குக் காரணமறியுங்களெனக்கூற ; அவர் நகரவாசிகளோடு வனமடைந்து அங்கு ரோமச முனிவரைக்கண்டு விண்ணப்பித்தனர். அவர் அரசனது பூர்வஜன்மத்தையுணர்ந்து பூர்வம் வணிகனாகவிருந்த இவன் கடும்பகலிற் கன்றோடு நீரருந்திக்கொண்டிருந்த பசுவை யோட்டித் தான் நீரருந்திய பாவத்தால் புத்திரனையிழந்தானென் றுணர்த்தினதன்றி, அதற்குப் பரிகாரமாக இவ்விரத மநுஷ்டிக்கும்படி கட்டளையிட்டனர். அதனை மந்திரிகளுரைக்க, அரசன் அவ்விரதத்தை அநுஷ்டித்துப புத்திரப்பேறடைந்தனன் என்று கிருஷ்ணபகவான் தருமநந்தனருக்குணர்த்தியதாகப் பவிஷ்யோத்தரபுராணம் பகருகின்றது.

## கக-வது. புரட்டாசிமாதக் கிருஷ்ணபக்ஷ ஏகாதசி.

இதற்கு அஜை என்று பெயர். இதிகாசம் :—அரிச்சந்திரன் அரசினையும் மனைவியையும் மகனையுமிழந்து வனத்தில் வசிக்கும்போது அங்குக் கௌதம முனிவரால் இவ்விரத விசேஷமுணர்ந்து, அதனை அநுஷ்டித்து இஷ்டலாபம் அடைந்தனன் என்று கிருஷ்ணபகவான் தருமபுத்திரருக்குக் கூறியதாகப் பிரமாண்டபுராணம் பேசுகின்றது.

உ0-வது. புரட்டாசிமாதச் சுக்கிலபக்ஷ ஏகாதசி.

இதற்கு வாமன ஏகாதசி என்றும், ஜயந்தி ஏகாதசி யென்றும், சயனைகாதசியில் அறிதுயில்கொண்ட அமலன் மற்றொருபுறமாகத் திரும்பிச் சயனித்தலால் பரிவர்த்தந ஏகாதசி என்றும்பெயர். இது, பரமோத்தமமானதால் இதில் வாமன மூர்த்தியை உபாசிக்கவேண்டு மென்றும், வாமனரான திரிவிக்கிரம மூர்த்தியின் வைபவம் இத்தகை யதென்றும், கிருஷ்ணமூர்த்தி தருமராஜனுக்குக் கூறியதாக ஸ்காந்த புராணஞ் சாற்றுகின்றது.

உக-வது. ஐப்பசிமாதக் கிருஷ்ணபக்ஷ ஏகாதசி.

இதற்கு இந்திரை என்று பெயர். இதிகாசம்:—கிருதயுகத்தில் மகிஷ்மதிபட்டணத்தில் அரசுசெய்திருந்த சத்ருசங்கார னென்னும் இந்திரசேனராஜனிடம் நாரதமுனிவ ரெழுந்தருளி நினது பிதா யம புரத்தைவிட்டுச் சுவர்க்கம் புகுமாறு இவ்விரத மநுஷ்டிக்கச் சொல்லி னெனக் கூற, அவராலேயே அநுஷ்டிப்பு முறையுணர்ந்து அநுஷ் டித்துத் தந்தையைச் சுவர்க்கம் புகுவித்தான் என்று கிருஷ்ணபக வான் தருமநந்தனருக்கு அருளியதாகப் பவிஷ்யோத்தர புராணம் பகருகின்றது.

உஉ-வது. ஐப்பசிமாதச் சுக்கிலபக்ஷ ஏகாதசி.

இதற்குப் பாசாங்குச மென்றுபெயர். இது மிக்க சிறப்புடைய தாகையால், இதிற் பலவிததானங்களைச் செய்வது உத்தமமென்றும், ஏகாதசிவிரதமென்பது இத்தகைய பலனைத்தரத்தக்க தென்றும் கிரு ஷ்ணமூர்த்தி தருமபூபதிக்குக் கூறியதாகப் பிரமவைவர்த்த புராணம் பகருகின்றது.

உங-வது. கார்த்திகைமாதக் கிருஷ்ணபக்ஷ ஏகாதசி.

இதற்கு ரமா என்றுபெயர். இதிகாசம்:—முசகுந்த சக்கரவர்த்தி யின் மகள் சந்திரபாகையை மணந்த சோபனன் என்பவன் ஒருநாள் மாதுலன் மனைக்குவர, அங்கு அவனும் அந்நகர வாசிகளும் ஏகாதசி

விரதத்தை மிகச்சிறப்பாக அநுஷ்டித்து உபவாச ஜாகாரங்களைச் செய்ய, அதைக்கண்ட சோபனனும் அநுஷ்டித்து மறுநாளுதயத்திற் பசியால் வருத்தமடைந்து இறந்தனன். அவன் அவ்வொருதின விரத பலத்தாலேயே தேவனாகி மந்தரபருப்பதத்தில் பூர்வஜந்ம வுணர்ச்சி யோடு அரசுபுரிகையில், அந்நாட்டுச் சோமசன்மனென்னும் புண் ணியவேதிய னொருவன் ஆங்குச் செல்ல, சோபனன் அவனைத் தன் மனைவி மாதுலருடைய க்ஷேமங்களை விசாரித்தனன். இவ்விஷயத்தை அந்தணன் சந்திரபாகைக் குணர்த்தவே, அவள் தனது கணவனை யடையவிரும்பி வனமடைந்து அங்கிருந்த வாமதேவமுனிவ ருபதே சப்படி இவ்விரதநோற்றுத் தேவசரீரம்பெற்று நாயகனையடைந்து மகிழ்ந்திருந்தனள் என்று தருமராஜனுக்குக் கிருஷ்ணபகவான் றினதாகப் பிரமவைவர்த்தபுராணம் பகருகின்றது.

உச-வது. கார்த்திகைமாதச் சுக்கிலபக்ஷ ஏகாதசி.

இதற்குப் பிரமோதினி என்று பெயர். ஆடிமாதச் சுக்கிலபக்ஷ ஏகாதசியிற் சயனித்துப் புரட்டாசிமாதச் சுக்கிலபக்ஷ ஏகாதசியிற் பரி வர்த்தனம் பண்ணிய பகவான் அறிதுயிலொருவியதினம் இதுவே இப்பெருமானை ஏகாதசிதினத்தில் இன்னின்ன புஷ்ப பத்திரங்களாற் பூஜித்தவன் இன்னின்ன பலனைப் பெறுவானென்றும், இந்திந்த தா னங்களைச் செய்தவன் இன்னின்ன பலனை யடைவானென்றும், பொ துவிதிகளைப் பெரும்பாலுங் கூறினதன்றி, இவ்விரத மான்மியங்களை யும் நாரதருக்குப் பிரமதேவன் விரிவாக அருளியபடி தருமநந்தனருக் குக் கண்ணபிரான் அருளியதாக ஸ்காந்தபுராணஞ் சாற்றுகின்றது.

உரு-வது. அதிகமாதக் கிருஷ்ணபக்ஷ ஏகாதசி.

இதற்குப் பரமேகாதசி என்று பெயர். இதிகாசம்:—காம்பிலி தேசத்தில் சுமேதன் என்னும் பிராமணன் பிறவிதரித்திரனாகவிருந்து கௌண்டின்னிய முனிவரால் இவ்விரதோபதேசஞ் செய்யப்பெற்று அவ்விதியின்படி அநுஷ்டித்துக் குபேரனைப்போன்ற செல்வத்தைப்

பெற்று மகிழ்ந்தனன். என்றும், மற்றும் அநுஷ்டித்துப் பேறு பெற்றோர் வைபவங்கள் பலவென்றும், கிருஷ்ணபகவான் தருமநந்தனருக்குக் கூறியதாக ஸ்காந்தபுராணஞ் சாற்றுகின்றது.

உசு-வது. அதிகமாதச் சுக்கிலபக்ஷ ஏகாதசி.

இதற்குப் பத்மினி என்று பெயர். இதிகாசம் :— கிருதவீரிய மகாராஜன் மனைவி பத்மினி என்பவள் இவ்விரதமநுஷ்டித்துக் கார்த்தவீரியனென்ற புத்திரனைப்பெற்று சகல சம்பத்துக்களையு மடைந்தனளென்று புலஸ்தியமுனிவர் நாரதருக்குக்கூறியதாக ஸ்காந்தபுராணங் கூறுகின்றது என்பனவேயாம்.*

இவ்விருபத்தாறு ஏகாதசிகட்கும் இங்குக்கூறிய நாமங்களேயன்றி வேறுபெயர்களும் வழங்குவதுண்டு. அவை, வைகாசிமாதச் சுக்கிலபக்ஷ ஏகாதசிக்கு நிர்ஜலைகாதசி யென்றும், ஆவணிமாதச் சுக்கிலபக்ஷ ஏகாதசிக்குப் பரிவர்த்தந ஏகாதசி யென்றும், ஐப்பசிமாதச் சுக்கிலபக்ஷ ஏகாதசிக்கு உத்தாநைகாதசி யென்றும், கார்த்திகைமாதச் சுக்கிலபக்ஷ ஏகாதசிக்குக் கைசிகைகாதசி யென்றும், மார்கழி தைமாதச் சுக்கிலபக்ஷ ஏகாதசிகளுக்கு வீமைகாதசி யென்றும், வழங்குவனவாம். அன்றியும், சுவர்க்கவாயிலேகாதசி சர்வஜீவஏகாதசி தத்த ஏகாதசி திதியேகாதசி முதலிய பெயர்களும் மாறிவழங்குவதுமுண்டு.

ஆனிமாதச் சுக்லபக்ஷ ஏகாதசியை பீமன் அநுஷ்டித்ததாக இவ் வடமொழிப்புராணங் கூறினும், மாசிமாதச்சுக்கிலபக்ஷ ஜய ஏகாதசி

---

* விரதமநுஷ்டிப்போர்க்கு இங்குக்கூறிய ஏகாதசிகளெல்லாம் உரியனவாகவிருக்க ஒவ்வொருவர் ஒவ்வொருஏகாதசியையே சிறப்பாக அநுஷ்டித்ததாக ஈண்டுக்கூறியது என்னையெனின், அவரவர்கள் விரும்பிய இஷ்டங்களைச் சித்திசெய்துகொள்ள அவ்வவ்வேகாதசிகள் உரியவா யிருந்தமையி னென்க. வைஷ்ணவ மாத்வ ஸமார்த்தர்களாகிய முக்கோஷ்டியார்க்கும் மார்கழிமாதக் கிருஷ்ணபக்ஷ ஏகாதசி எப்படிசிறப்பாய் உரியதாயிற்றோ அவ்வாறே அவரவர்களுக்கு அதது சிறப்பாயிற்று. எனவே, மற்றைய ஏகாதசிகளைப் பொதுவாக அநுஷ்டித்து வந்தார்களென்பதே கருத்து.

யை வீமசேனன் அநுஷ்டித்ததாகச் சுன்ஞகம் வரதராஜபண்டிதரியற்றிய தமிழ் ஏகாதசிபுராணத்தும், கார்த்திகைமாதச் சுக்கிலபக்ஷ ஏகாதசியில் நம்பாடுவாரென்னும் பாகவதசீலர் குறுங்குடிப்பெருமாளை ஆராதித்துப் பரமபதம் பெற்றதாக வராகபுராணத்தும், ஷை மாத ஏகாதசியிலேயே சததனு என்னுமரசன் இவ்விரததினத்தில் * பாஷண்டனிடம் பாஷித்த பாவத்தாலடைந்த இழிபிறப்பை அவன் மனைவி சயிப்யை யென்பாள் தானநுஷ்டித்த மேற்படி விரதபலத்தாற் போக்கி அவனுடன் மருவினளென்று விஷ்ணுபுராணம் மூன்றாமம்சத்தும், ஷை மாத ஏகாதசியையே உருக்குமாங்கதனும் அவன்மனைவியரும் அவனாட்டாரும் அநுஷ்டித்து வைகுந்தம் புக்கனரென பாகவதபுராணத்துங் கூறுகின்றமையால், இன்னு மிவர்களைப்போல அநுஷ்டித்துப் பரமபதம்புக்கார் சரித்திரங்கள் பற்பல புராணங்களிற் கிடைக்கப்பெறுமென்று நினைக்க ஏற்படுகின்றது. நிற்க;

இத்தகைய வைபவங்கள் வாய்ந்த இவ்வேகாதசிகளுள் கைசிக ஏகாதசி மான்மியத்தை ஸ்ரீ பராசரபட்டர் அருளியுள்ள வியாக்கியானத்தைத்தழுவித் தமிழ்ச்செய்யுளாலியற்றத்துணிந்தனன். பலநூல்களின் பயிற்சியும் இலக்கிய இலக்கணத்தேர்ச்சியும் நன்குடையராய், அரிய பெரிய விஷயங்களைத் தாமியற்றும் நூலினுட் கற்பனாலங்காரங்களுடன் பெய்து, கேட்போர் செவிக்கினிமையும் ஆய்வோர்க்கு ஆழமுடைப்பொருட்பேறு முண்டாமாறு இயற்றவல்லுநரே நூல்களையும் உரைகளையும் இயற்ற வல்லுநராவரென்பதை ஆன்றோரால் யானுணர்ந்துவைத்தும், என் ஆசை என்வழிகேளாது மிக்கோங்கலால், அதன்வழிபட்டு, என்னறிவு வளர்ச்சியின் பொருட்டே முன்னோர் கருத்துக்களையே திரட்டிப் புல்லிய பாடல்களால் இந்நூலைப் புனைந்திட்டனனெனவே மதிக்கற்பாலதாம். என்னாலியற்றப்பெற்ற குறிப்புரைகளும் உரைகளும் தோத்திரப்பாக்களும் மற்றவையும் இக்கருத்தாலேயே இயற்றப் பெற்றனவெனவே ஆன்றோர் கொள்ளக்கடவர்.

* பாஷண்டன் - வேதசாஸ்திர நியமங்களைத் துறந்தவன்.

# முகவுரை.

இதனை வடமொழிப்படி மொழிபெயர்த்துச் சிலவித்வான்கள் முன்னிலையிற் பார்வையிடுவித்தது மல்லாமல், திருக்கயிலாச பரம் பரைப் பொம்மபுரம் ஸ்ரீ-சிவஞான பாலையதேசிக ராதீனத்துச் சிதம் பரம் ஈசானியமடம் ஸ்ரீமத் இராமலிங்கசுவாமிகளவர்கள் முன் னிலையிலும் ஒருமுறை பார்வையிடுவித்துத் திருத்தியவாறு சென்னை முத்தியாலுபேட்டைப் பூர்வகலாபிரசங்கநிகேதன சபையாரும் புரசபாக்கம் புராணப்பிரசங்கசபை யாரும், புதுவண்ணாரப்பேட்டை வித்யாவிருத்திநிலய சபையாரும் உபகரித்த பொருட்சகாயத்தால் அச்சிட்டு வெளிப்படுத்தினேன். இந்நூலைப் பதிக்குங்காலத்து உட னிருந்து உதவிபுரிந்துவந்த எனது ஆப்தரான ம-ள-ள-ஸ்ரீ வித்வான் சே. முத்துக்கிருஷ்ணநாயுடு அவர்கள் நன்றி ஒருபோதும் மறக்கற் பாலதன்று. ஆன்றோர்கள் இதனிற்றோன்றும் குற்றங்களைப் பாராட் டாது என்னைத் திருத்துதலோடு ஆசீர்வதிப்பார்களென நம்புகின்ற னன். சுபம்.

இங்ஙனம்
தாழ்மையுள்ள,

**க. வ. திருவேங்கடன்.**

23, தாதா முத்தியப்பன் தெரு,
ஜார்ஜ்டௌன், சென்னை.

ஸ்ரீ

ஸ்ரீவராகபுராணத்தில்

# ஸ்ரீவராஹநயினார் ஸ்ரீ பூப்பிராட்டிக்குத்

திருவாய்மலர்ந்தருளிய

# கைசிகமாஹாத்ம்யம்.



இக்கைசிக மாஹாத்ம்யமானது வியாஸமகருஷியால் அருளிச்செயப்பெற்ற பதினெண்புராணங்களுள் ஸாத்விகபுராணமான வராஹ புராணத்தில் உத்தரகாண்டத்துள் ஸ்ரீவராகபூமி ஸம்வாதத்தில் பதினொன்றாம் அத்தியாயத்தில் உள்ளது. யஜ்ஞவராகமூர்த்தியான எம்பெருமான், பூப்பிராட்டியாரைப் பிரளயார்ணவத்தி லிருந்தெடுத்து முன்னையபடி நிலைநிறுத்திப் பிராட்டியாரின் திருவுளப்பாங்கினை வினவிப் பின்பு இச்சரித்திரத்தை அருளிச்செய்தனராகையால், இது அதியுத்தமோத்தம மானதென் றுணரத்தக்கது.

---

## *(ஸ்ரீ பராசரபட்டர் வ்யாக்யாநத்தின் ஸங்க்ரஹம்.)

ஸ்ரீ பூமிப்பிராட்டி ஸ்ரீ வராஹநயினாரைப்பார்த்து, "ஸகல லோகங்களுக்கும் ஸ்வாமியான ஸ்ரீ யப்பதியே! அடியேன் தேவரீருக்குச் சிஷ்யையுமாய் தாஸியுமாய் பக்தையுமா யிராநின்றேன். அடியேனுக்காக ஸர்வ ப்ராணிகளுடைய உஜ்ஜீவநார்த்தமாக எளிதாயிருப்பதொரு உபாயம் அருளிச்செய்யவேண்டும்." என்ன, ஸ்ரீ வராஹநயினார் பூமிப்பிராட்டியைப்பார்த்து, அருளிச்செய்கிறார் :—ஒருவன் நம் ஸந்நிதி

---

* இது, மேற்படி வ்யாக்யாந பங்க்திகளையே திரட்டி அவ்வாக்ய முடிபாகவே எழுதப்பெற்றது.

யை மெழுகுவனாயின் ஓரடிக்கு ஆயிரமாயிரம் வருஷம் நமக்குப் பக்தனாய் தாஸ்யரஸாநுபவம் பண்ணிக்கொண்டிருப்பன்; பன்னிரண்டு வருஷம் நம் ஸந்நிதியை மெழுகிக்கொண்டு வருவனாயின், பெரிய ஸ்ரீமத்வம்சத்திலே பிறந்து நமக்குப் பக்தனாய், பின்பு குசத்வீபத்திலேசென்று பதினாயிரம் வருஷம் அங்குள்ள போகங்களைப் புஜித்து அங்குநின்றும் மீண்டு கர்மபூமியிலே ராஜாவாக ஜந்மித்து, நமக்குப் பக்தனாயிருந்து, மீளவும் நம் ஸந்நிதிமெழுகி நம்கார்யஞ்செய்து, நம் சாஸ்த்ரத்தையும் ஓதியுணர்ந்து, அநேக பூமியடங்க நமக்குச் சமர்ப்பித்து, அநேகம் ஸந்நிதிகளை நமக்கு இயற்றிவைத்து, சரீரமுடிவில் நம்வீட்டைப் பெறுவன். நம் ஸந்நிதியை மெழுகுகிறவனுக்குத் தூரத்திலிருந்தாவது, ஸமீபத்திலிருந்தாவது, கோமயம்கொண்டுவருமவன் ஓரடிவைப்புக்கு ஆயிரமாயிரவருஷம் இந்த்ராதிகளாலே புகழத்தக்கவனாய், ஸ்வர்க்கலோகம் அநுபவித்துக்கொண்டிருந்து, அங்குநின்றும் சால்மலித்வீபத்திலே சென்று பதினோராயிரவருஷம் அங்குள்ள போகங்களை அநுபவித்துப் பின்பு கர்மபூமியிலேவந்து ராஜாவாய்ப் பிறந்து, தார்மிகனாய், ஸர்வ சாஸ்த்ரவித்தமனாய்ப் பின்பு பன்னிரண்டுவருஷம் ஏகாக்ரசித்தனாய்ப் பக்தியோகத்தாலே நம்மை உபாஸித்து நம்வீட்டைப்பெறுவன்.

நமக்குக் குடிக்கவும் கொப்பளிக்கவும் நம்வீடுமெழுகவும் தண்ணீர் சுமந்துவந்து கொடுப்பவன், அந்த ஜலத்தினுடைய ஒவ்வொரு துளிக்கும் ஆயிரமாயிரவருஷம் க்ரௌஞ்சத்வீபத்திலே நற்காரியஞ் செய்யுமவனாயிருந்து, கர்மபூமியிலேவந்து, ஸர்வஸங்க பரித்யாகம் பண்ணி, நம்வீட்டைப்பெறுவன். நம் ஸந்நிதிக்கு அலகிடுமவர்கள் ஸ்த்ரீகளாயினும் புருஷர்களாயினும் அவர்கள் அலகிடுமிடத்தில் யாதொரு ப்ரகாரம் அலகுவிழுமோ அந்தப்ரகாரத்துக்கு ஆயிரமாயிர வருஷம் ச்வேதத்வீபத்திலே நல்லகர்மமுடையனாய் ஸர்வதர்ம நிச்சயத்தையுடையனாய்ச் சுசியாய்ப் பாகவதனாய் ஸித்தனாய் அபராதவிவர்ஜிதனுமாய் அவ்விடத்திலே அநேகபோகங்களை யனுபவித்து, ஸ்வர்க்கலோகத்திலே சென்று, நந்தனவனத்திலே அப்ஸரஸுக்களோடே க்ரீடித்து, அங்குநின்றும் கர்மபூமியிலேபிறந்து ஸர்வஸங்க பரித்யாகம்பண்ணி நம்வீட்டைப்பெறுவன்.

# கைசிக மாஹாத்ம்யம்.

பாடவல்லீர் யாவனொருவன், ஜாகரவ்ரதநிஷ்டனாய்ப், ப்ராஹ்ம மான முஹூர்த்தத்திலே நாம் முகங்கொடுத்துக் கேட்கிலுமாம், நாம் ஜகத்ரக்ஷண சிந்தையிலே அந்யபரனாயிருக்கிலுமாம், நம்முடைய குணவிசேஷங்களை யுள்ளாக்கிப் புணர்க்கப்பட்ட காதைகளை ஒருபலத்தையு நினையாமல் நம்பக்கல் பக்திவிசேஷத்துடனே நமக்கே பாடக்கடவன். இப்படி உம்முடைய புகழையும் நம்முடைய புகழையும் உள்ளாக்கிப் புணர்க்கப்பட்ட காதைகளை நமக்குப் பாடினால் அந்தக் காதைகளிலுண்டான ஓரோரக்ஷரங்களுக்கும் ஆயிரமாயிரவருஷம் ஸ்வர்க்கலோகத்திலே யிருப்பன்; அவன் ஸ்வர்க்கலோகத்திலே யிருக்குமளவில், அங்குள்ளார் எல்லாரிலும் வடிவழகனுமாய்க் குணவானுமாய், ஸ்வர்க்க ஸுகத்திலே விருப்புடையானுமாய், ஸர்வதர்மங்களையும் அறிந்து, அங்கும் நம்மைமறவாமல் அங்குள்ளார்க்குத் தலைவனேன் இந்த்ரன்வந்து ஸேவிக்கவிருந்து இந்த்ரனைப்போலே நம்மை மறந்திராமல் நமக்குப்பக்தனாயிருந்து, ஆராதநங்களான கர்மங்களைச்செய்து, நம்மையே சிந்தித்துக்கொண்டு, இந்த்ரலோகத்திலிருக்குமளவும் அங்குள்ளார் எல்லாரையும் அழைத்துத் தான் பாட்டுக்கேட்பதன்றித் தானும் நம்மையே நினைத்துப்பாடுவனாதலால், அங்குநின்றும் அவனைக் கொண்டுபோய் எப்போதும் நம்பெரியவீட்டிலே நம்மையே பாடும்படி செய்வோம்.

இப்படி வராஹநயினார் அருளிச்செய்யக்கேட்ட பூமிப்பிராட்டியார், திருவுள்ளத்தின் உகப்பெல்லாம் திருமுகத்திலே தோற்றும்படி மலர்ந்த திருமுகத்துடன் ஸ்ரீ வராஹநயினாரைப்பார்த்தருளி விண்ணப்பஞ்செய்கிறார்:— "ஸ்வாமீ! வேதங்களாலாதல் ருஷிகளாலாதல் சொல்லுகையன்றிக்கே தேவரீர் தாமே அருளிச்செய்யும்படியாயிருந்தது இப்பாட்டின்வைபவம். இப்படிக்கொத்த கீத ப்ரபாவத்தாலே தேவரீருடைய திருவடிகளைப் பெற்றவன் யாவனொருவன் அவனை அருளிச்செய்ய வேண்டுமென்று விண்ணப்பஞ்செய்தார்.

இப்படி விண்ணப்பஞ் செய்த ஸ்ரீ பூமிப்பிராட்டியைப்பார்த்து ஸர்வேச்வரன் ஒருவார்த்தை அருளிச்செய்கிறார்:—உம்மோடு நாம் ரஸித்துச் சொல்லும் வார்த்தையாக நினையாதேயும்; இது ஸத்யமான வார்த்

தையாயிருக்கும்; யாவனொருவன் நம்மைப்பாடி நம் பெரியவீட்டைப் பெற்றான் அவனைச்சொல்லுகிறோம் கேளீரென்று அருளிச்செய்கிறார்:—வாராய் தேவியே! தக்ஷிணதிக்கிலே மஹேந்த்ர மென்றொரு பர்வதம் ப்ரஸித்தமா யிராநின்றது; அவ்விடத்திலே க்ஷீர நதியென்று ஒரு நதியானது தக்ஷிணஸமுத்ர காமியாயிராநின்றது; முன்பு நீரும் நாமும் குறுங்குடியாகக் கட்டியிருந்த ஆச்ரமத்திலே பாபயோநியிலே பிறந்தானொருவன் நமக்குப் பாடவேண்டுமென்று ஸங்கல்பித்து ஜாகரவ்ரத நிஷ்டனாய், நம்பக்கல் பக்தியோடே ப்ராஹ்ம முஹூர்த்தத்திலே வந்து, தன்ஜாதிக்கேற்றபடி யிருந்து பாடினான். இப்படி அந்த்ய ஜாதியிலே பிறந்திருந்தும், நம் குணாநுஸந்தாநத்தைப் பண்ணி நமக்குப் பக்தனாய்வந்து இப்படி பத்துவருஷம் பாடினான். பின்பொருகால் கார்த்திகைமாதத்துக் கிருஷ்ணபக்ஷ * த்வாதசி யன்று ராத்ரி ஒரு ஜாமத்துக்குமேல் ப்ராணிக ளெல்லாரும் உறங்கினவளவிலே, தான் ஜாகரவ்ரத நிஷ்டனாகையாலே உணர்ந்திருக்

* நம்பாடுவார் விரதமநுஷ்டித்தது ஏகாதசியி லெனவேகொண்டு கோயிலாதி திருப்பதிகளில் அத்தினத்தைக் கொண்டாடிவர, ஈண்டுத் துவாதசியைவிதந்தது என்னையெனயோசிக்கில், அவரநுசரித்த அன்றைய ஏகாதசி தசமிவேதையைக் கொண்டிருக்கலாமென்று நிச்சயிக்கலாகின்றது. அவ்வேதையையுடைய ஏகாதசியை அநுஷ்டிக்காமல் துவாதசியில் அவ்விரத மநுஷ்டிக்க வேண்டுமென்று "தசமிவே தையினைக் கூடிய வேகா தசியினில் விரதஞ்செய் யாமல் - வசையிலா துயருந் துவாதசி தன்னின் மருவுறு மனமருந் தாமல் - சுசியுறுந்திரயோ தசியிற்பா ரணைசெய் சுத்தர்கட் காவிறை சுமக்கும் - வசுதையைச் சற்பாத் திரமறை யோர்க்கு வழங்கிய பலன்கள்வந் துறுமால்." எனப் பாகவதம் உருக்குமாங்கதபடலம் கஅ-வது செய்யுள் விளக்குகின்றமையும் உணரத்தக்கது. ஆகையால், துவாதசிவிரதம் ஏகாதசி விரதமன்றியில்லை யாகையாலும், துவாதசியில் ஜாகரவிரதமின்மையாலும், வேதையை யடைந்தகாலத்தில் துவாதசியில் அநுஷ்டிக்கலாமென்றும் அவ்விரு திதிகட்குமுள்ள அபேதத்தையுணர்த்தியதாயிற்று. எனவே, நம்பாடுவார் அநுஷ்டித்தது ஏகாதசியென்பதே துணிவு.

கிற இடந்தேடிவந்து, நமக்குப் பாடுவதாகக் கையும் வீணையுமாகக் கொண்டு தன் வீட்டினின்றும் புறப்பட்டான். இவன் வருகிற நடு வழியிலே ஒரு ப்ரஹ்ம ரக்ஷஸ்ஸின் கையிலே அகப்பட்டான். ரக்ஷஸ்ஸு மாம்ஸபக்ஷணியாகையாலே பலவானாயிருந்தான். நம்பாடுவான், நம்மை நினைந்து, நைந்து நைந்து உள்கரைந் துருகினவனாகை யாலே துர்ப்பலனாயிருந்தான். நம்பாடுவான், ப்ராஹ்மண னல்லாமை யாலே ஒரு பஞ்சாதியைச் சொல்லி, விடுவித்துக் கொள்ள மாட்டிற் றிலன். பலவா னல்லாமையாலே பராக்ரமித்து விடுவித்துக் கொள் ளவும் மாட்டிற்றிலன். "சக்கரத்தண்ணலே!" என்று தாழ்ந்து, கண்ணீர் ததும்பி, நம்பக்கல் ஸர்வ பரந்யாஸம் பண்ணி நின்று, ப்ர ஹ்ம ரக்ஷஸ்ஸைப்பார்த்து மதுரமாக ஒருவார்த்தைசொல்லுவான்:—

"ரக்ஷஸ்ஸே! சிற்றஞ்சிறுகாலே ஸர்வேச்வரனைப் பாடிப் பறை கொள்ளப் போகிறவனாயிருக்கும் என்னை விடுவாய்" என்றனன். கேட்ட ரக்ஷஸ்ஸு, அதிக்ரூரமாய் ஒரு வார்த்தையுஞ் சொல்லாதே உதாஸீநித்து நின்றது. கோபாக்ராந்தனாய் நின்று மேல் விழுந்து வருகிற ரக்ஷஸ்ஸைப் பார்த்து, மீளவும் நம்பாடுவான் ஒரு வார்த்தை சொல்லுவான்:—"நீ இப்படி என்பேரில் ஓடிவந்து செய்யப்போகி றது யாது?" என்றான். ரக்ஷஸ்ஸு, நம்பாடுவான் வார்த்தையைக் கேட்டுத் தன்பசியாலே மநுஷ்ய மாம்ஸத்திலே ஆசையுடைத்தான தாய்க்கொண்டு, கோவமானதொரு வார்த்தையைச் சொல்லிற்று. "நீ நிகரிலவன் புகழ்பாடி இளைப்பிலமென்று பத்துவருஷம் பாடி இசைப்பித்துத் திரிகிறாய்; நான் பத்துநாளாகப் பட்டினியாய் இளைத் துத் திரிகிறேன்; ஆகையாலே எனக்குப் பக்ஷ்யமாகத் தெய்வம் கற் பித்துவைத்த உன்னை விடுவேனோ விடுவதில்லை; உன்சரீரத்தின் அவயவங்களைத் தனித்தனியே பிரித்து, ருதிரமாம்ஸாதிகளைக் கொ ண்டு, தேவதாராதநம்பண்ணி, என்பசியைத் தீர்த்துக்கொண்டு எனக்கு இஷ்டமானபடி போவேன்." என்றது.

இப்படிப் ப்ரஹ்மரக்ஷஸ்ஸு சொன்ன வார்த்தையைக் கேட்டு நம்பாடுவான், சரீரஹாநிபர்யந்தமான விபத்து வந்தவளவிலும் நம் பக்கல் பக்த்யதிசயத்தாலே வ்யவஸ்திதனாய், நமக்குப் பாட வேண்டு

மென்கிற ஆசையாலே அந்த ரக்ஷஸ்ஸை அநுவர்த்தித்து நன்மை யானதொரு வார்த்தையைச் சொல்லுவான் :—"வாராய் மஹாபாக்னே! யதார்த்தம் சொல்லுகிறேன், நீ கேள் ; நீ சொன்னபடியே உனக்கு நான் பக்ஷ்யமாகக்கடவேன் ; ப்ரஹ்மாகற்பித்தபடி செய்ய வேண்டியது எனக்கும் அவச்யந்தான் ; ஆனால் எனக்கு ஒரு நியமமுண்டு; அது ஸர்வேச்வரனுடைய ப்ரீதியின் பொருட்டுச் செய்யும் ஜாகரவ்ரதம் என்று ஒருவ்ரதம் ; அதை முடித்து, நான் மீளவும் வருகிறேன்; என்னை உனக்குப் பக்ஷ்யமாகக் கொள்ளக்கடவாய்; பகவானைப் பற்றி நான் ஏற்பட்டுக்கொண்ட வ்ரதத்துக்குப் பங்கம் வாராமல் ரக்ஷிக்கவேண்டும்; இந்த ஜாகரவ்ரதம், முடிந்தவுடனே உன்னுடைய இச்சைப்படி என்னைப் பக்ஷ்யமாகக் கொள்ளக்கடவாய்." என்றனன். இப்படி நம்பாடுவான் சொன்ன வார்த்தையைக்கேட்டு, தன்பசியாலே இளைத்திருக்கிற ரக்ஷஸ்ஸானது, இவன் பதறாமல் வார்த்தை சொன்னபடியாலே இனிதாக ஒருவார்த்தை சொல்லிற்று. "வாராய் சண்டாளனே! உன்ஜாதிக் கேற்றபடியிருந்தது நீ சொன்ன வார்த்தை. போய் மீண்டும் இங்குவருகிறேனென்றது அஸத்யமேயாகும். எவன் ரக்ஷஸ்ஸின் னிடத்தினின்றும் தப்பிப்போய் மீண்டும் அதின் கையிலே வந்தகப்படுகிறவன்? இவ்வழியொழிய பலவழிகளுமுண்டு; இத்தேசமொழிய பலதேசங்களுமுண்டு; உன்னுடைய தேசத்தைவிட்டுத் தேசாந்தரத்தைக்குறித்துப் போகவன்றோ? விசாரிக்கிறாய்; தன் சரீரவிநாசம் பிறக்குமிடத்தைத் தானறிந்திருந்தும் அவ்விடத்தைக்குறித்து யாரேனுமொருவர் வருவாருண்டோ? மாம்ஸமும் உண்ணுமவனாயிருக்கிற என்கையிலே அகப்பட்டுத் தப்பிப்போய், மீண்டும் வருகிறேனென்று நேராகவே அஸத்யம் சொன்னாய்." என்றது.

இப்படிச்சொன்ன ப்ரஹ்மரக்ஷஸ்ஸின் வார்த்தையைக்கேட்டு நம்பாடுவான், தர்மத்துடன் கூடியதாகவும் இனிதாகவும் ஒருவார்த்தை சொல்லுகிறான்:—" நான் பூர்வ கர்ம தோஷத்தாலே இந்த ஜந்மத்திலே அந்த்யஜாதியிலே பிறந்தேனாயினும், பரமாத்மஜ்ஞாந முண்டானபடியினாலே ஒருமநுஷ்யனானவனுக்கு உண்டான தன்மை

னைக்குமுண்டு ; ஆகையால் என்னுடைய வார்த்தையைக் கேட்பா யாக ; த்ரைலோக்ய நாதனை ஸர்வேச்வரனைத் திருப்பள்ளியுணர்த்தி வ்ரதத்தை நிறைவேற்றி, மீண்டும் யாதொருபடி நான்வருவேனே அதற்கிடான ப்ரதிஜ்ஞைகளைப் பண்ணிக்கொடுக்கிறேன். லோக முண்டானது ஸத்யத்தாலே ; லோகம் நிலைபெற்றிருப்பது ஸத்யத் தாலே ; ஆகையால் நான் ஸத்யஞ்சொல்லு மத்தனைபோக்கி அஸத்யம் ஒருகாலும் சொல்லேன். வாராய் ப்ரஹ்மராக்ஷஸனே ! என்னுடைய ப்ரதிஜ்ஞையைக்கேளாய் ; மீளவும் வந்திலேனாகில், யாவனொருவன் ஸர்வகாரணமான ஸத்யத்தைத் தவறுகிறானோ அவனுடைய பா பத்தை யடைந்தவனாகிறேன்; யாவனொருவன் மன்மதனால் பாதிக்கப் பட்டவனாய்ப் பரஸ்த்ரீ கமநம் பண்ணுகிறான் அவன்பாபத்தை யடைந்தவனாகிறேன் ; புஜிக்குமிடத்துத் தனக்கும் தன்பக்கலுள் ளார்க்கும் பாகபேதம் பண்ணுகிறான்யாவனொருவன் அவன்பாபத்தை யடையக்கடவேன் ; ப்ராஹ்மணனுக்குப் பூமிதாநம்பண்ணி மீளவும் அதைவாங்குவான் யாவனொருவன் அவன்பாபத்தை யடையக்கட வேன் ; ரூபவதியான ஸ்த்ரீயை யௌவநகாலத்தில் அநுபவித்துப் பின்பு அவளிடத்தில் தோஷத்தைச் சொல்லுகிறான் யாவனொருவன் அவன்பாபத்தை யநுபவிக்கக் கடவேன் ; ப்ராஹ்மணனொருவன் ச்ராத்தம்பண்ணி ஸ்த்ரீஸங்கமம் பண்ணுவானோ அவன்பாபத்தை யடைவேன் ; யாவனொருவன் பிறருடைய அன்னத்தை நன்றாகப் புஜித்துத் தயையில்லாதவனாய் மறுபடியும் அவனைத் தூஷிக்கிறானோ அவன் பாபத்தையடையக்கடவேன் ; யாவனொருவன் கன்னிகை யைக் கொடுக்கிறேனென்று சொல்லிவிட்டுக் கொடாமலிருக்கிறானோ அவன்பாபத்தை யடையக்கடவேன்; ஒருவனுக்கு ஒன்றைத் தருகிறே னென்று சொல்லி, சொன்னபடி கொடாமலிருக்கிறான் யாவனொரு வன் அவன்பாபத்தை யடைவேன் ; ஷஷ்டி அஷ்டமி அமாவாஸ்யை சதுர்த்தசி இந்தத் திதிகளில் ஸ்நாநம்பண்ணாமல் புஜிக்கிறான் யாவ னொருவன் அவன்பாபத்தை யடையக்கடவேன் ; மஹோபகாரகனை மித்ரனுடைய பார்யையைக் காமபரவசனாய் அடைகிறான் யாவனொரு வன் அவன் பாபத்தை யநுபவிக்கக்கடவேன் ; யாதொருவர் தங்க ளுக்கு முறைமைப்படியினைத் தரவல்ல ஆசார்யனுடைய பத்நியையும் இம்

மையிலே ஆதரிக்கும் ராஜாவினுடைய பத்நியையுங் காமத்தினலே அநுபவிக்கிறார்களோ? அவர்கள் பாபத்தை யடையக்கடவேன்; யாவ னொருவன் இரண்டு ஸ்த்ரீகளை விவாஹம்பண்ணிக்கொண்டு ஒரு ஸ்த்ரீயை வெறுத்து, மற்றொரு ஸ்த்ரீயை ஸந்தோஷத்துடன் அநுப விக்கிறானே? அவன்பாபத்தை யடையக்கடவேன்; வேறு கதியில் லாதவளாயும் பதிவ்ரதையாயும் இருக்கிற ஸ்த்ரீயை யெளவநத்திலே விட்டுவிடுகிறான் யாவனொருவன்? அவன்பாபத்தை யடையக்கட வேன்; தாஹத்தினலே நிரம்பவும் வருத்தப்பட்டு நீர் குடிப்பதற்கு ஓடிவருகிற பசுக்கூட்டத்துக்கு ஜலபாநவிக்நம் பண்ணுமவன் யாவ னொருவன் அவன்பாபத்தை யடையக்கடவேன்; ப்ரஹ்மஹத்யை, கட்குடி பொன்திருடல் வ்ரதபங்கம் முதலான மஹாபாதகங்களைப் பண்ணுகிறான் யாவனொருவன், அப்படிப்பட்ட பதிதர்களுக்குப் பெரி யோர்களாலே யாதொருகதி சொல்லப்படுகிறதோ? அந்தக் கொடிய பாபத்தை யடையக்கடவேன்; யாதொருவர் ஆச்ரித ஸுலபனையும் ஸர்வ வ்யாபியுமான ஸ்ரீவாஸுதேவனை ஆராதநம்பண்ணமல் பிற தெய்வங்களை உபாஸிக்கிறார்களோ? அவர்களுடைய துர்க்கதியை யும் அடையக்கடவேன்; யாவருக்கும் உயர்ந்தவனாய் ஸர்வாந்தர்யாமி யாய் ஸர்வ கர்மங்களாலும் ஆராதிக்கப்பட்டவனாய் முமுக்ஷுக்களாலே உபாஸிக்கப்பட்டவனாய் மோக்ஷம் அருளுமவனாய், முக்தர்களாலே அடையப்பட்டவனாயுள்ள ஸர்வேச்வரனையும்' காணிலும் உருப் பொல்லாதவராய், செவிக்கின்னாத கீர்த்தியராய், பேணிலும் வரந்த ரும் மிடுக்கிலாதவராய்க் கர்ம பரவசரான வேறுதேவர்களையும் ஸமா நமாக எண்ணுகிறான் யாவனொருவன்? அவனைப் போலே நித்ய ஸம் ஸாரியாகக்கடவேன்." என்று சொல்லினான்.

இப்படிப் ப்ரதிஜ்ஞைபண்ணின நம்பாடுவானைப்பார்த்து, ப்ர ஹ்மரக்ஷஸ்ஸு ஸந்துஷ்டனாய் நமஸ்கரித்து, "இப்படி ப்ரதிஜ்ஞை பண்ணின நீ கடுகப்போய் வ்ரதத்தைமுடித்துத் திரும்பிவரக்கடவாய்." என்று மதுரமா யொருவார்த்தை சொல்லிற்று. ராக்ஷஸனாலே விடப் பட்ட நம்பாடுவான் ஸம்ஸாரத்தினின்றும் முக்தனானவன் வருமாபோ லே வந்து முன்புபோலே நமக்குப்பாடினான். உடனே பொழுதும்வி டியலாயிற்று. ஜாகரவ்ரதத்தையும் முடித்தவளவிலே நம்பக்கல் ஆத்ம

ஸமர்ப்பணமும்பண்ணி, தனக்குத் த்யாஜ்யமான சரீரங்கழிகையி லுண்டான ஆசையாலே கடுகமீண்டான். நம்பாடுவான், மீண்டுபோகிற வளவிலே பாடவருகிற விரைவிலும் இரட்டித்தவிரைவோடே போகப்புக்கான். இப்படிப் போகிறவன்முன்னே ஒரு புருஷனவன் வந்து நின்று, நம்பாடுவானைப்பார்த்து, இனிதாக ஒருவார்த்தை சொன்னன் :— "உமது நடையைப்பார்த்தவாறே முன்புபோலன்றிக்கே அறக்கடுகியிருந்தது; நீர் இப்படி எங்கேபோகிறீர்; இதை எனக்கு உண்மையாகச் சொல்லவேண்டும்" என்றனன். ஸத்ய ப்ரதிஜ்ஞனை நம்பாடுவான், அந்தப் புருஷன்வார்த்தையைக் கேட்டு அவனைப்பார்த்து, மதுரமான ஒருவார்த்தையைச் சொல்லுவான்:— "நான் ப்ரஹ்மராக்ஷஸனுக்கு முன்பே சபதங்களைப் பண்ணிப்போந்தேன்; யாதோரிடத்திலே அந்தப் ப்ரஹ்மராக்ஷஸன் நின்றானோ? அங்கே போகிறேன்; அங்கே அவனைக் கண்டிலேனாகில், அவன் இருக்குமிடந் தேடிப் போகக்கடவேன்" என்று சொல்லினன். இப்படி நம்பாடுவான் சொன்ன வார்த்தையைக் கேட்டு, அந்தப்புருஷன் இவனுடைய மனதைச்சோதநம் பண்ணக்கடவனாய் ஒரு மதுரமானவார்த்தையைச் சொல்லுவான்:— "வாராய் நல்லவனே! அங்கே ராக்ஷஸ ஜாதியாய், விபீஷணரைப்போலே தார்மிகராயில்லாமல் பாபிஷ்டனாய், ஆதியிலே சரீரங்கொண்டு தப்பவொண்ணாதபடி மாம்ஸபக்ஷகனாய், அவனை நீ கொல்லவொண்ணாதபடி பலவானுமாய் இருப்பானிடம் நீ போகக்கடவையல்லை" என்று சொன்னான். அந்தப்புருஷன் வார்த்தையைக்கேட்டு ஸத்யவாதியான நம்பாடுவான், ஸத்யத்தைக்காட்டிலும் ஜாகரவ்ரதத்தையுடைத்தானவனாகையாலே மோக்ஷவிரோதியான சரீர விமோகத்திலே த்ருடமான நிச்சயத்தை யுடைத்தானவனாய்க்கொண்டு, மதுரமான ஒருவார்த்தையைச்சொன்னான் :— "நீர் எப்படிச் சொன்னீர் அப்படிச் செய்வதில்லை: நான் ஸத்யத்தையும் கெடுப்பதில்லை; இது என்னுடைய த்ருடமானவ்ரதம். நான் ஸத்யந்தப்பினாலும் என் ஸ்வபாவம் ஸத்யத்தைத் தப்பாது. நான்தர்மத்தைவிட்டு ஒருகாலும் திரும்புவதுமில்லை; பொய்சொல்வதுமில்லை; உமக்கு நமஸ்காரம் போம்" என்று சொன்னான்.

இப்படிச்சொன்ன நம்பாடுவானைப்பார்த்து, அந்தப்புருஷன் இவர், ப்ராணனைக்காட்டிலும் ஸத்யத்தை ரக்ஷிக்கக்கடவேனென்று சொன்னபடியாலே ப்ரியப்பட்டு, "அமலங்களாக விழிக்கும்" என்று சொல்லுகிறபடியே நம்பாடுவானைப் பாடவாவிட்ட ப்ரஹ்மரக்ஷஸ்ஸி னுடைய ஆபத்தும், நம்பாடுவானுடைய ஆபத்தும் போம்படி பூர்ண கடாக்ஷம்பண்ணி, உமக்கு "மங்கள முண்டாகக்கடவது" என்று விடைகொடுத்தான். தேவியே! அந்தப்புருஷன் யாரோ என்று ஸந்தேஹியாதேயும்; நாமேயாகுமென்று அருளிச்செய்தார் ஸ்ரீவராஹ நயினார்.

இப்படி அந்தப் புருஷனாலே விடைகொடுக்கப்பெற்ற நம்பாடு வானும் ப்ரஹ்மரக்ஷஸ்ஸிருக்கிற இடத்தை யடைந்து, அவனைக்கிட்டி மதுரமாக ஒரு வார்த்தையைச் சொல்லுவான் :—"வாராய் ப்ரஹ்ம ரக்ஷஸ்ஸே! நீ அநுமதிபண்ணப்போன நான் ப்ராஹ்மண நியமந் தைப்பெற்றுப் போனவனுகையாலே, எனக்கு வேண்டினபடி ஸர் வேச்வரனைப்பாடி உகப்பித்து, பூர்ண மனோரதனானேன். நீயும் என்சரீரத்தில் ருதிரமாம்ஸாதிகளைக்கொண்டு பூர்ணனாகக்கடவாய்." என்றான். இப்படி நம்பாடுவான் சொன்ன வார்த்தையைக்கேட்ட ப்ரஹ்மரக்ஷஸ்ஸு, நம்பாடுவானைப்பார்த்து, மதுரமாக ஒரு வார்த்தை சொல்லிற்று :—"வாராய் நல்லவனே! நீ அவித்யனான சண்டாளனா னாலும் ஸத்யமும் தர்மமும் உன்னாலே ரக்ஷிக்கப்பட்டது; உனக்கு இப்படியிருக்கிற புத்தியைக்கொண்டு ஸந்துஷ்டனானேன்" என்றது. இப்படி ப்ரஹ்மரக்ஷஸ்ஸின் வார்த்தையைக்கேட்ட நம்பாடுவானும், பயரூபமான ரக்ஷஸ்ஸைப்பார்த்து, மதுரமாக ஒரு வார்த்தையைச் சொன்னான் :—"வாராய் ரக்ஷஸ்ஸே! நான் சண்டாளனானாலும் பாப கர்மத்தினின்றும் விடுபட்டவனென்று நான் சொன்னவார்த்தையை மெய்யாகக் கொள்ளக்கடவாய்" என்றான். ப்ரஹ்மரக்ஷஸ்ஸு நம் பாடுவானைப்பார்த்து, "வாராய் மஹாநுபாவனே! ப்ராணனை விடுவ தாக வந்த உனக்குப் ப்ராணனோடே போகவேண்டியிருந்தால், இன் றிரவு ஸர்வேச்வரனுக்குப் பாடின பாட்டின் பலத்தைத்தந்து உன் ப்ராணனோடே போவாய்" என்றனன். இப்படி ப்ரஹ்மரக்ஷஸ்ஸின் வார்த்தையை நம்பாடுவான் கேட்டு மறுத்து ஒரு வார்த்தையைச்

சொல்லுவான்:— " நீ முன்பு சொன்னாற்போலே நானும் தவறாமல் வர்தனன்; நீயும் அப்படியே என் சரீரத்தை பக்ஷிக்கக்கடவாய்; நான் கீதபலனைத் தருவதில்லை" என்றான். ராக்ஷஸனானவன் நம்பாடுவான் காரணத்துடன் சொன்னவார்த்தையைக்கேட்டு, மறுபடியும் நம்பாடு வானைப் பார்த்து, "மாஹாநுபாவனே! கீதபலனெல்லாம் தராவிடினும் கீதபலனில் பாதியாகிலும் தந்து, பயங்கரமான இந்தப் பக்ஷணத்தி னின்றும் தப்பிப்போனா லாகாதோ?" என்று சொல்லினான். நம்பாடு வான், இப்படிச் சொன்ன ப்ரஹ்மராக்ஷஸ்ஸைப் பார்த்து, "உன்னுடைய சரீரத்தைப் பக்ஷிக்கிறேனென்று சொன்ன நீ பக்ஷியாமலிருந்தாயாகி லும், கீதத்தினுடைய பலனைத் தருவதில்லை" என்றான். இப்படி நம்பாடுவான் வார்த்தையைக் கேட்டுக் கொடிய செய்கையோனான ப்ரஹ்மராக்ஷஸனும் சொல்லுவான் :— " நீ ஒரு யாமத்தினுடைய புண்யத்தைத் தந்தாயாகில் உன்னைப் புத்ர தாரங்களோடே நன்மையா கக் கூட்டுகிறேன்" என்றனன். இப்படிப் ப்ரஹ்மராக்ஷஸன் வார்த் தையைக்கேட்டு, த்ருடவ்ரதனாய் தீரனுயுமிருக்கிற நம்பாடுவான், இனி தாக ஒரு வார்த்தைசொல்லுவான் :—" வாராய் ரக்ஷஸ்ஸே! ஒரு யாமத்தில் பாடின பலனும் தருவதில்லை; என்னிடத்துள்ள பாட் டைப்போலே ராகமுண்டாயிருக்கிற ரக்தத்தைப் பாநம்பண்ணு வாய்" என்றனன்.

இப்படி நம்பாடுவான் சொன்னவார்த்தையை ப்ரஹ்மராக்ஷஸ கேட்டு, இவன் உயிரை மாறிக்கொடுத்தாவது ஸத்யம் தப்பாமல் நின் றவனானையாலும், ப்ராணனைக்காட்டிலும் பாட்டினுடைய வைபவத் தை அறிந்தவனாகையாலும், இவன் ஸர்வத்தினுடைய வைலக்ஷண்யத்தை அறியுமவனேயென்று நிச்சயித்து, நம்பாடுவானைப் பார்த்து ஒரு வார்த்தை சொல்லுவான் :—" நீ விஷ்ணுஸந்நிதியிலே பாடின கான த்திலே ஒரு கீதத்தினுடைய பலனைத்தந்து, அந்தப் பலப்ரதாநத்தாலே என்னை இந்த ராக்ஷஸ ஜந்மத்தினின்றும் உத்தரிப்பிக்க வேண்டும்" என்று சொல்லிச் சரணம்புகுந்தான். இப்படிச் சரணம்புகுந்த ரக்ஷஸ் ஸைப்பார்த்து, ஸத்யப்ரதிஜ்ஞனான நம்பாடுவானும் அப்படியே ஆகட் டும்; எந்தப் ப்ராக்ருத கர்மத்தாலே இந்த ராக்ஷஸ வேஷத்தை

யடைந்தாய் என்றான். இந்தப்படி நம்பாடுவானாலே கேட்கப்பட்டு, பூர்வ ஸ்மரணம் வந்து, ரக்ஷஸ்ஸானது நம்பாடுவானைச் சரணம் புகுந்து ஒரு வார்த்தை சொல்லிற்று.

"வாராய் மாதங்கனே! * சரக கோத்ரத்திலே சோமசர்மா என்ற ஒரு ப்ராஹ்மணனாய்ப் பிறந்து, ஸூத்ர மந்த்ரத்தினாலும் நழுவி, யூபகர்மத்திலே நிஷ்டனாய், லோப மோஹங்களாலே பீடிக்கப்பட்டு யாகம் பண்ணும்போது, அந்த யாகத்தினிடையே சூலதோஷம் என்று ஒரு தோஷமுண்டாயிற்று. பின்பு ஐந்தாம் ராத்ரியிலே யாகம் முடிவதற்கு முன்னே மரணமடைந்தேன். இப்படிப் பண் ணின யாகத்தினுடைய தோஷத்தாலே ராக்ஷஸயோநியிலே பிறந் தேன். இந்தக் கீதத்தினுடைய வைபவத்தாலே இந்தத் தோஷத்தி னின்றும் என்னை ரக்ஷிக்கவேண்டும்" என்று நம்பாடுவானைப் பின் னும் சரணம்புகுந்தான். இப்படிப் ப்ரஹ்மரக்ஷஸ்ஸின் வார்த்தையைக் கேட்டு நம்பாடுவானும் அப்படியே ஆகட்டுமென்று ரக்ஷஸ்ஸைப் பார்த்து, ஒரு வார்த்தை சொல்லுவான் :—"என்னாலே பாடப்பட்ட பச்சிமமான கீதத்துக்குக் கைசிகம் என்று ஸ்வரமுண்டு, அந்த ஸ்வரத் தினுடைய பலனாலே நீ முக்தனாகக்கடவாய்" என்று, நாம் விபீஷ ணனுக்கு அபயப் ப்ரதாநம் பண்ணினாற்போலே நம்பாடுவானும் அந்த ப்ரஹ்மராக்ஷஸனுக்கு அபய ப்ரதாநம்பண்ணினான்.

தேவியே! யாவனொருவன் நம்ஸந்நிதிமுன்னே கைசிகமென் கிற பண்ணைப்பாடுகிறானோ? அவன் நம்பாடுவான் ராக்ஷஸனை உத் தரிப்பித்தாற்போலே தன்னை ஆச்ரயித்தவர்களை உத்தரிப்பிப்பன். இப்படி நம்பாடுவான் பக்கல் வரம் பெற்ற ப்ரஹ்மரக்ஷஸ்ஸ ° யஜ்ஞ சாபத்தினின்றும் முக்தனாய் அந்த தேஹத்தைவிட்டுச் சரத்கால சந்த் ரனைப்போலே விமலமான வம்சத்திலேபிறந்து, நமக்குப் பக்தனாய்க்

---

* சகர கோத்திர மென்று கொள்ளவேண்டுமென்பதே பலர் கருத்து; சரக கோத்திரமென்று ஈண்டுள்ளபடி கொள்ளில், இந்நூ லில் ௬௭-வது பக்கத்திலுள்ள ௨-வது செய்யுளை "சரக கோத்திரத் திற்சனித் திட்டனென்-நரகம் யாவுமழுந்து நகுபவக்-கரக மாகிக் கடலுடை மாநிலுக்-குரக மென்ன வுறுபா மாயினேன்" என மாற்றிப் படித்துக் கொள்க.

குற்றேவல்செய்து இருந்தான். நம்பாடுவானும் பின்பு அநேககாலம் நடக்குப் பாடி நம் பெரியவீடு பெற்றான்.

இப்படி நமக்குப்பாடுகிறவன் பலனை உண்மையாகச்சொன்னோம். விசேஷித்துக் கார்த்திகை மாஸத்தில் சுக்லபக்ஷ த்வாதசியினன்று ஸர்வ ஸங்கபரித்யாகம்பண்ணிப் பக்தியோடேவந்து நம் முன்னே பாடுகிறவர்களும் பாட்டுக்கேட்குமவர்களும் நம்பெரியவீட்டிலே நமக்குப் பல்லாண்டு பாடிக்கொண்டிருப்பார்கள். என்று ஸ்ரீபூமிப்பிராட்டியாரைப் பார்த்து ஸ்ரீவராஹநயினார் அருளிச்செய்தார். இப்படி அருளிச்செய்யக்கேட்ட நாய்ச்சியாரும் ப்ரளயார்ணவத்தி லுண்டான இளைப்பெல்லாந் தீர்ந்து, காரூபமாயிருப்பதொரு உபாயம் இருந்தபடி என்? என்று க்ருதார்த்தையானார். சுபம்.

ஸ்ரீ பராசர பட்டர் வ்யாக்யாநத்தின் ஸங்க்ரஹம்

பூ ற் று.

---

கராசல முறவே பிணித்திழுப்பக் கராசல மவணி னேலமிடச்
சராசனம் வாளம் வளையாழித் தண்டு தரித்து வந்துதவித்
துராசை யொருவு முனிவர்தொழத் துலங்கு மரங்கர் பதமேத்தும்
பராசர பட்ட ரிருபாதப் பதும மலர்கள் வாழியரோ.

ஸ்ரீபாகவதம் திருவரங்கப் படலம்-கஙக.

ஸ்ரீ

# வாழ்த்துரை.



*பலவிகற்பத்து ஏழடிப்பஃறொடை வெண்பா.*

ஆழ்வார்க ணற்றமிழை யாதரித்த நம்பெருமாள்
வாழ்வாங் குறுங்குடியின் மாதவத்தாற் போந்தருளு
நம்பாடு வார்சரித நற்றமிழ்ப்பா விற்புனைந்தான்
செம்பாப் புலவர் திகழ்கருத்தெ லாஞ்செறித்துச்
செந்தமிழ் தேருந் திருவேங்க டக்கவிஞ
னெந்த மகத்திட மெஞ்ஞான்றுங் கொண்டமர்வோன்
சந்தமுற் றோங்க தழைந்து.

இது, மதராஸ் பியராபீஸ் டிராபிக் ஓவர்சியர்
ம-௱-௱-ஸ்ரீ, மோசூர். முனிசாமி முதலியாரால்
இயற்றப்பெற்றது.



ஸ்ரீ

இராமஜயம்.

# நம்பாடுவார் சரித்திரம்

என்னும்

# கைசிக வேகாதசிபுராணம்.

—✣—

## பாயிரம்.

### கடவுள் வாழ்த்து.

### சடகோபர்வணக்கம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

இலகுபுகழ்த் திருக்குருகூர்ச் சிந்தூரத்தி னீழலமர்ந் தியோகு
பூண்ட, வலகிலருட் பெருமானை நான்மறையைத் தமிழிலரு ளமலன்
றன்னை, விலகியில கிடுமொளியி னெறிப்போந்த மதுரகவி விரும்பு
வோனைக், கலகமிடும் வினைவிலக நலமெய்த வுளமதனிற் கணித்து
வாழ்வாம்.

### ஸ்ரீவராகப்பெருமாள்.

நிலமகளிட் டளங்கெடமுன் னிறுவெறுழிப் பெருமானை யொரு
மானைச்சூழ்ந், தலமரவே வதைத்தானைப் பதைத்தானை முறையிடுங்கா
லதைச்செ குக்க, வலமுதலை விளித்தானைக் களித்தானைப் பரமபதம்
வரையொன் றுறச்சஞ், சலமகலத் துரந்தானைப் புரந்தானைச் சந்ததமுந்
தாழ்ந்து வாழ்வாம்.

### பெரியபிராட்டியார்.

நலக்குமரி வலத்தமரு நாரணியைப் பூரணியை நடலை முற்றும்,
விலக்குமுனி வரர்சுரரா தியர்க்கருளும் விமலையைநற் கமலை தன்னைக்,

கலக்குமிட ரகலவருள் கையவளைச் செய்யவளைக் கமலமேந்து, மிலக்குமியை யலக்கணற வேத்துவா மிசையலங்கல் சாத்துவாமே. ௨

## பூப்பிராட்டியார்.

சாலவுத நியினழுந்தித் தான்றளருங் காற்றுமோ தரணோர் வெள்ளைக், கோலவுரு வாய்க்கோட்டிற் கொணர்ந்துமுன்போ னிலவுவிக்கக் குலவிப் போற்றி, யேலவுயி ருய்யுநெறி யப்பரனைத் தான்வினுயெவர்க்குந் தேற்று, ஞாலவுரு வாமிறைவி நற்பதமே யற்பகலு நயந்து வாழ்வாம். ௩

## திருவநந்தாழ்வான்.

கனந்தழுவு நிறத்தெம்மான் காமருதாட் குரிமைபெறீஇக் கதித்து மிக்க, வனந்தழுவும் பாதுகையு மாதனமு மணிக்குடையு மகிழ்விற்றுஞ்சு, மினந்தழுவு மணையுமா யிருந்துதிருத் தொண்டாற்று மெழின்மை பூண்ட, வனந்தனெனும் பெருமான்ற னடிமுடியி னுறப்புனைந்தே யவலந் தீர்வாம்.

## சேனைமுதலியார்.

### எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வானைவேட் டெக்கு மலரவ ஞதி வானவர் மறைமுனி வரர்க, ளேனையோ ரமய மெதுவென வேங்க வெழின்மணி மண்டபக் கடையிற், சேனைமா மாரி தகைந்தவெம் பரமன் சொரூபனுய்ச் சூரல்கொண் டிலவுஞ், சேனைமா முதலி திருவடி முடியிற் சேர்த்திடியெம் வினைமுத லறுவாம். ரு

## பெரியதிருவடி.

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அருடரு மறைக ளின்னுங் காண்கிலா வமல ஞனை
புருடவுத் தமன்றன் செய்ய புண்டரீ கப்ப தங்க
டெருடரும் படிசேவித்துச்செங்கைகொண்டெவர்க்குந்தேற்றுங்
கருடதே வன்பொற் றூள்கள் கருத்திலு னிருத்து வாமே.

## சிறியதிருவடி.

கஞ்சனா தியர்கள் போற்றக் கடிகொளு மிலங்கை மேவி
வஞ்சிநுண் மருங்கு லன்னை வயினெம்மான் குறிப்பு ணர்த்தி
வஞ்சர்க டுஞ்ச வோச்சி மணிகொணர்ந் தண்ணற் கீந்த
வஞ்சனைச் சேயை யெம்மு ளனுதின மிறைஞ்சு வேமால் ௭

## பொய்கையாழ்வார்.

### எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வளமருவு திருக்கச்சித் திருவெஃகாவில்
  வண்கூலப் புட்கரிணி வயங்கும் பொற்ற
தளமருவு வனசமிசைப் பாஞ்ச சன்யத்
  தனியமிச ராய்த்தழைத்துத் தகைசார் தொண்ட
ருளமருவு கோவலூர்ப் பெருமான் சால
  வுவப்பமுதற் றிருவந்தா தியிற்று தித்தே
களமருவா வீடுபெற்ற பொய்கை யார்தங்
  கழலிணைக ளகலாவெங் கருத்த வாமே. ௮

## பூதத்தாழ்வார்.

பொன்னெயில்சூழ் கடன்மல்லைப் புரத்து மிக்க
  புனிதமா தவிப்பூவின் முளையாம் சத்திற்
றன்னிகரி லருட்குழவி யாகி மெய்ம்மை
  தான்றெளிக்கும் வைணவத்திற் றலைவ ராகி
மன்னுதிருக் கோவலூர் தனினி ரண்டா
  மந்தாதி மொழிந்துமற்றை யிருவ ரோடு
பன்னுபல தலம்பணிந்தே பரமன் மேய
  பரமபத மடைபூதர் பதத்திற் றாழ்வாம். ௯

## பேயாழ்வார்.

குன்றாத புகழ்மயிலைக் கூவத் துற்ற
  குருவல்லி மலர்வயினார்ந் தகவம் சத்தா

(௯) முளை - தண்டு ; ஈண்டுக் கௌமோதகி.

லென்றாக வவதரித்தா ரிறைவ னன்பி
 னொழுச்சியாற் பேயரென் றிசைக்கும் பேரா
ரொன்றாக முன்னிருவ ரோடுங் கோவ
 லூரினினள் ளிருளினெருக் கிறைவற் சுட்டி
நன்றாக மூன்றாமந் தாதி சொற்று
 நற்பதம்பெற் றவர்மலர்த்தா ணண்ணி யுய்வாம். கO

## திருமழிசையாழ்வார்.

நோக்கபுகழ் மழிசையினிற் பார்க்க வற்குத்
 துய்யகன காங்கியயி னூழி யம்ச
மிக்குதித்துத் திருவாளன் மனைவ ளார்ந்து
 விருத்தற்கு மகவுதிப்பான் மிச்சி லீந்து
புக்குணர்ந்து பலசமயம் வைண வத்திற்
 போந்துகிரிற் கண்காட்டிப் பத்தி சாரத்
தக்கபெயர் பெற்றுக்கொங் கணற்கு நற்கே
 சாற்குமரு டந்துமுத லாழ்வார்ச் சார்ந்தார்; கக

பூவரொடு மயிலையல்லிக் கேணிப் போற்றி
 முதுதிரும ணங்குபெற் றொருவி ருத்தைக்
காவலின்யெள வனமளித்துக் கணிகண் ணற்கா
 வரவணையா னொடுகச்சி யகன்று புக்குத்
தாவுபுலி யூரின்மறைத் தொடர்புந் தாமோ
 தரனுக்கு மவனுருவுந் தேற்றி யையன்
மேமெழுச்சி குடந்தைபெற்றந் தாதி சந்த
 விருத்தமொழி மழிசையர்தாள் வியந்து வாழ்வாம். கஉ

## குலசேகராழ்வார்.

கோல்லிநகர்த் திருவஞ்சிக் களத்து வேந்தன்
 கோதிறிட விரதன்பாற் கவுத்து வாம்சம்
புல்லவுதித் தரசேய்ந்து சேனை யண்ணல்
 போதத்தா லுண்மையுணர்ந் தடியர்ப் போற்றி

நல்லியலிற் போதுகழீஇ யகித்த கம்பி
னற்கரமிட் டரங்கநக ராதி வாழ்த்திச்
சொல்லரிய திருமொழிவண் முகுந்த மாலை
சொற்றகுல சேகரர்தாள் பற்றி வாழ்வாம். ௧௩

## பெரியாழ்வார்.

மன்னுவில்லி புத்தூரந் தணர்கு லத்தில்
வருமுகுந்தர் பதுமைதம்பாற் கருளாம் சத்திற்
றன்னிவிண்டு சித்தரெனத் துலங்கி மாலைத்
தொண்டுபுரி நாண்மதுரை மன்னன் சங்கை
தன்னையொழித் தவன்சபைப்பொற் கிழிக வர்ந்து
தந்தலைவன் காட்சிதரப் பல்லாண் டோதி
யுன்னுதிரு மொழியுமுரைத் தோங்கி வான
முற்றபெரி யாழ்வார்தா ளுளத்துள் வைப்பாம். ௧௪

## ஆண்டாள்.

காவளஞ்சேர் புதுவைபட்டர் கோமான் சோலைக்
கமழ்குல்லைக் கீழ்ப்புவியம் சத்திற் கண்ட
நாவளஞ்சேர் கோதைதந்தை யாத்த தாம
நறுங்குழலின் மிலைந்துபெம்மா னயப்ப நல்கிப்
பாவளஞ்சேர் திருப்பாவை திருமொ ழிப்பா
சுரங்களினுற் றம்பரிவு பகர்ந்த ரங்கன்
மாவளஞ்சேர் திருமேனி மணந்த வாண்டாண்
மலர்ப்பதங்க ளனுதினமும் வணங்கி வாழ்வாம்.

## தொண்டரடிப்பொடியாழ்வார்.

வேதியர்சூழ் திருமண்டங் குடிவாழ் வேத
விப்பிரநா ராயணராய் வனமா லாம்சத்
தாதரவி னுதித்துவன மாலை யோடே
யலர்மாலை யரங்கற்கு மகிழ்விற் சாத்தி
யேதமிகு மொருகணிகை மயலிற் சிக்கி
யிருஞ்சிறைவிட் டடியரடிப் பொடியா யோங்கிப்

# கைசிக வேகாதசிபுராணம்.

போதமுணர்ந் தரும்பள்ளி யெழுச்சி மாலை
புனைந்தார் பதமலரைப் போற்றி வாழ்வாம். க௬

## திருப்பாணாழ்வார்.

சென்னியினன் னிசுளையினிற் சிரீவற் சாம்சத்
தினிற்சாலிக் கதிர்த்தோன்றிப் பாணர்ச் சேரி
துன்னிவளர்ந் திலச்சினையொண் விடுவச் சேனத்
தோன்றலிற்பெற் றரங்கரைத்தன் வசம ழிந்தே
பொன்னியிற்றென் கரைநின்று பாடுங் காற்புன்
கற்கவெறீஇப் பூசுரர்க டுரத்தப் பெம்மான்
றன்னருளாற் சாரங்கர் தோண்மேற் போந்து
தமிழ்பாடிக் கதிபெற்றார் சரணஞ் சார்வாம். க௭

## திருமங்கையாழ்வார்.

திருவாலி நகர்க்கடுத்த குறைய லூராள்
சிறுமன்னர் கள்ளர்குலத் திலகர் நீலர்
குருவாழிப் பெருமாளுக் கடிமை பூண்ட
குமுதவல்லி பொருட்டினில்வை ணவராய் நாளு
மொருவாது வைணவரா யிரவர்க் குண்டி
யூட்டலிற்றன் பொருளுமனன் பொருளு மோவ
வெருவாது மாலளித்த பொருளான் மன்னன்
மிகுகடனீந் தெஞ்சியதா னடாத்திப் பின்னர் ; க௮

வியனமைச்சர் நால்வரொடு மடவி சார்ந்து
விடபியுற்று வழிச்செல்வோர்த் தடுத்துச் சூறைச்
செயலினிற்றந் நியமமுற்ற வோர்வான் மாயன்
றேவியொடு மறையவனாய்ச் செறியக் காலா
ழியையும்விடா தேகவர வியர்திட் டேயெட்
டெழுத்துணர்த்த வாடினே னெனும்பா வோதி
நயங்கொளுஞ்சீர்ச் சம்பந்தர் வியக்கப் பாடி
நாகையிற்பொன் மயப்புத்த னுருக்க வர்ந்தார் ; க௯

அப்பொருளாற் றிருவரங்கற் கணிவி மான
மருமதிற்கோ புரம்வகுத்துச் சிற்பர் சில்லோர்க்
கொப்பில்கதி யளித்திறைவற் குறுவி பூஈவு
முளுற்றியெம்மான் றலம்பலவு முவந்து போற்றித்
திப்பியமாம் பெரியதிரு மொழிமுன் னுறு
திகழ்பிரபந் தங்களத்திக் குறுங்கு டிக்கண்
செபபரிய பதம்பெற்ற சார்ங்காம் சத்தர்
திருமங்கை மன்னரடி சேவித் துய்வாம். ௨0

நம்மாழ்வார்.

திருக்குருகூர்க் காரியார்க் குடைய நங்கை
திருவகட்டிற் சேனையார் மாயன் மற்றும்
பெருக்கமிகு கவுத்துவத்தி னம்ச ராகிப்
பிறந்துதிரு மாறனென்பேர் பெற்று றங்கா
மருக்கிளரும் புளியமர்ந்து சேனை வேந்தான்
மருவியிலச் சினையாதி சடமாம் வாயு
வுருக்கியல்பாற் பெறுபெயரு மருவி யங்ஙு
னுறுமதுர கவியார்க்கு விடையீந் தாண்டார்; ௨௧

பெரியதிரு வடியினில்லை குகந்த நாதன்
பிறங்கிப்பே ரருள்புரிய மற்றை நூற்றெட்
டரியதிருப் பதிகளில்வா ழமலர் தாமு
மங்ஙனமே நல்கிடப்பெற் றகில முய்வான்
றிருமறைக ளனைத்துமே திருவி ருத்தந்
திருவாசி ரியம்பெரிய திருவந் தாதி
யுரியதிரு வாய்மொழியி னுரைத்து முத்தி
யுற்றநம்மாழ் வார்பதங்கள் பற்றி வாழ்வாம். ௨௨

மதுரகவியாழ்வார்.

நல்குதிருக் கோளூரின் மறைக்கு லத்தே
நற்கலுழ னம்சமாய் நயந்து தோன்றிப்

பல்குமறை யாதிகடோர்ந் திறைநத லங்கள்
பணிந்தயோத் தியினிட்டை பயில்காற் றெற்கிற்
புல்குபராங் குசயோகி யொளியைக் காணூஉப்
போந்துபதே சம்பெற்றே யவர்க்குப் பின்னேண்
மல்குவிழா வயர்ந்துசங்கத் தவரை வென்ற
மதுரகவி யாழ்வாரை வந்திப் பாமால். உ௩

ஸ்ரீபாஷ்யகாரர்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

நடையலா நடைகைக் கொண்டோர் சமயங்க ளவித்து நற்பே
றடையலாம் வைண வத்தி னரியநட் பங்க டேற்றித்
தடையிலா தெவரு மங்ஙன் சரிக்குமா கருணை கூர்ந்த்
வுடையவர் தாள்க டம்மை யுடைமையாக் கொண்டுய் வாமே.

ஆசார்யகோஷ்டிகள்.

கலிநிலைத்துறை.

பணமா யிரங்கொ ளரிமீது படுத்த வெம்மான்
மணமேய பாத மலர்சேர்த்தி வகுத்தெ லோர்க்குங்
குணமாய முத்திக் குறியீந்த குரவ ரோடு
மணவாள ரென்னு முனிவேந்தரு மன்னி வாழ்க. உ௫

அவையடக்கம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கனைகட லுலவு மிப்பி கருவிய நாற்ற மோரா
தனையது தருநல் லார மதனையே கொள்ளு மாபோல்
வினைமிகு மடியன் கூறு மிகைமொழித் திறநோக் காமற்
புனைதுழாய் முடியன் சீர்த்தி யொன்றுமெய்ப் புலவர்கொள்வா

பாயிர முற்றிற்று.

---

ஆகச் செய்யுள் - உஎ

## முதலாவது

# புராணவரலாறு புகன்றவத்தியாயம்.



### எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருவளர் மருமத் தரிந்தமன் றனைக்கை சிகப்பனுற் றினந் தொறும் பாடிக், கருவளர் பிறவிக் கடல்கடந் துயர்வான் கதித்தநம பாடுவான் சரித, முருவளர் சூத முனிவரன் றன்னு லுணர்ந்தவ ருறை விட மாய, தருவளர் நைமி சத்தியல் சிறிது சாற்றிமேற் கதைநடத் துதுமால். க

சவுனகன் சனகன் சனந்தனன் சனுதன் சனற்குமா ரன்சதா னந்தன், கவுதமன் புலகன் காசிபன் வசிட்டன் கண்ணுவன் கார்க்கன் சாண் டிலியன், கவுசிகன் மரீசி யுரோமசன் குச்சன் காலவ னாதன் கபிலன், பவுமனே பரத்து வாசன்மாண் டவியன் பற்பனுத் தாலத் னுதங்கன். உ

அத்திரி பிரகி யுக்கிர சீலன் காத்தியா யனன்போதா யனனே, சத்தியன் பருவ தாக்கினி மதங்கன் புலத்தியன் சுகன்சாதா தபன்சீர், மெத்திய தத்தாத் திரியனுங் கீரன் விபாண்டகன் விச்சிர வாசம, வர்த்தனே காத சன்மன்வான் மீகி வாமதே வன்சுனச் சேபன். ௩

என்னுமிம் முனிவ ராதிய ரோர்ஞான் றேரிடைக் குழுமியா மியற்று, மன்னிய தவமே யாகமே யோக மாதிய நாளுமல் குறவுந், துன்னினு மிடையூ றெளிதினீங் குறவுந் துலங்குறுந் தெய்வதோ வனமொன், றன்னமூர் பரனை யடைந்தறி குதுமென் றனுமினைச் சித் தியு வுலகம்.

அவ்வுழி வேதா வடிமுடி யிறைஞ்சித் தங்குறை யறைதலு மகிழ்வுற், றெவ்வமில் குசையை நேமியி னியற்றி யீதெவ ணிறுத் திடு மவணீ, ரொவ்விய தவஞ்செய் துறைகுதி யென்ன வுருட்டவந் நேமியோர் வனத்திற் செவ்விதின் வீழ்ந்ததன்னதி னதனை நைமிசம மெனத்திகழ்ந் ததுவே.

ஞாழலே கோங்கு நாவல்*சே காயா ஞமைஞெமை யோமை†யா புன்கு, மாழையே வில்ல மாசுதேக் காரம் வழைபிடா பலாவகில் மதூக, மேழிலைம் பாலை சண்பகந் திலக மித்திமே யத்தியே செருந்தி, வேழமே கிளுத்தம் வேங்கை‡யா ஞத்தி வெள்ளிலே குராமரா மருது. ௬

ஏலமே யிரத்தி குருந்தமே நரந்த மெட்டியே யில்லமுள் ளிலவு, சாலமே வாகை கிஞ்சுகம் வகுளந் தமாலமே யதிங்கமா தவிதக், கோல மே யிலவங் கங்கருங் காலி கொன்றையே சிந்துரம் வன்னி, தாலமே பாலை மரவமே யசோகு சாதியால் பாடலந் தான்றி. ௭

இன்னபல் விருக்கச் செறிவினன் மௌவ லிலகுறு மாலதி யாதி, துன்னிய கொடியின் றுறுமலாற் சுனையின் றொகுதியாற் றூநதிப் பரப்பான், மன்னுவான் வறங்கூர் காலையும் வளங்கூர் வண்மையா லிகபர வீடென், றுன்னுமுப் பயனு முற்றவர்க் களிக்கு மொண்மை யா லுயர்ந்ததவ் வனமே. ௮

வந்திடு முனிவர்க் காண்டலு முன்னர் வாட்டமுற் றிருந்தன மாமுஞ், செந்தளி ரீன்று பைந்தழை பொதுளித் தேமலர் செறிந்தி றைஞ் சுவபோற், றந்தலை குரங்கித் தங்கனி ரொழுக்கித் தாழ்ந்தருங் காய்கனி தாங்கி, யந்தில்பல் பறவை முழக்கினுற் றுதித்தே யமன் றன வடியவர் குழுப்போல். ௯

பாதப நறுமென் கொடிசெடி யாதி பயில்சிலீ முகமொடு பறவை, போதலு முனிவர் மருட்சியா னெழுந்து பொம்மலிற் பெரிதொலித் திடுத, நீதறு சலில மலர்மது கனிகாய் செவ்விய கிழங்குநன் முதிரை, யாதிய வுளவீங் கனுதின நுகர்வுற் றமர்கவென் றறைவது கடுக் கும். ௧௦

* சே - அழிஞ்சில். † யா - ஒருவிதமரம். ‡ ஆண்-பனை.
(௭) இரத்தி - இலந்தை. இல்லம் - தேற்று. தாலம் - கூந்தற்பனை.
(௯) குரங்கல் - வளைவு. (௧௦) சிலீமுகம் - வண்டு.

இனையபல் வளமும் விலங்கொடு பறவை யேனவு மிகல்கடந் துறையு, மனையதோர் சிறப்பு நாடியே யளவி லற்புத முடையரா யங்ஙன், வினையறு நோன்பு புரிகுவான் பன்ன சாலைகள் வேறுவே றமைத்துத், தினையள வேனுங் கலங்குத லிலராய்ச் செறிந்தவண் விறந்தனர் முன்னாள். கக

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

நலமலி யித்த கைத்த நைமிசத் தமருந் தூயோர்
சலமலி யுலகின் பெற்றிச் சால்பொருங் காராய்ந் தோதி
வலமலிந் தரிய வாய மாதவ மாதி முற்றிக்
குலமலிந் திட்டா ரன்னோர் கொள்கையைக் குறிக்க லாமே. கஉ

வரத்துறை பிரம சாரி மன்னுமெய்க் கிருகி வானப்
பிரத்தனே சந்நி யாசி யெனப்படும் பேத நான்கின்
றரத்தரே யெனினு மேலாந் தவத்தினி லொருமை யுற்ற
ருரத்தினா லுறுதி பெற்ற ருறுபெருஞ் சீர்த்தி யாளர். கங

வேதவே தாங்க மாதி விழுமிய கலைகள் வல்லார்
மோதுமைம் புலனும் வென்று முறைமையிற் றிறம்பு இல்லா
ரோதுமெவ் வுயிருந் தத்த முயிரென வோம்பு மில்லார்
காதர மிரிக்குந் தூய கடவுண்மெய்ப் பத்தி நல்லார். கச

சித்தசித் தீச னென்னச் செப்புமுப் பொருளுந் தேர்ந்து
தத்துவத் ததீத ஞானேன் றுமரைக் கண்ண னல்லால்
வித்தக னென்னு மற்றை விண்ணவ ரல்ல ரென்று
பொத்தவித் 'தறிந்தார் புன்மை புறக்கணித் தொதுக்கு நெஞ்சர்.

இவர்குழீஇ யிருந்த வோர்நா ளிவர்தவந் திரண்டா லன்ன
கவரொளிப் படிவன் வேதா கமமுதற் கலைகள் வல்லன்
றவமிகுஞ் சூத னெய்தத் தாழ்ந்தடி முடிமு டித்துக்
குவவினர் துதிமு ழக்கிக் குதூகலித் துடன்கொண் டிற்றார். கசு

நம்மகத் தெய்து வித்துத் தபனியத் தவிசு நல்கி
யெம்மகத் திருளை யோட்டு மென்றெனப் போந்த தேவே

யிம்மணித் தவிசி னும்ப ரிருக்கவென் றிரந்து வேண்ட
செம்மணச் சூத மேலோன் செறிந்தவன் புடன மர்ந்தான. ௧௭

இருந்தவம் முனிவ னந்த விருந்தவ முனிவர்ப் பார
வருந்துநல் லமிர்தி னீவி ரறைதரு மொழிக்கு வந்தேம்
பொருந்துநும் முளத்தி னேதோ பொதிவது முகத்தி னோர்ந்தேம்
விரிந்திட வுரைமி னென்ன விரதாங் குரைப்பர் மன்றோ. ௧௮

ஐயகே ளெங்க ளுள்ள மவாவினை தொன்றுண் டஃது
பொய்யறப் புகலு கிற்பம் பொறியமர் நிறத்து நாதன்
மெய்யருட் காதை கேட்கும் விருப்பமே யன்றி வேறு
வெய்யது கலவு மோநும் வியனடி யடைந்தோர்க் கென்றார். ௧௯

கேட்டலுஞ் சூத மேலோன் கிளர்ந்தவா தரத்த னாகிப்
பாட்டினிற் றுதித்தும் வேதம் பார்த்திடற் கரிய நாதன்
வாட்டமில் சரித மெம்மால் வகுப்பரி தெனினு மன்னோன்
றாட்டுணை துணையாக் கொண்டு சாற்றுவஞ் சிறிதிங் கென்று ௨௰

தனக்கரு டந்த வையன் றாளிணை தலையிற் சூடிக்
கனக்குலை யோய நீண்ட கருவரை கொண்ட டர்த்தோன்
மனக்கவ லகற்றுஞ் செய்ய மாக்கதை பல்ல சொற்றான்
றனக்குலை பெற்ற வீயாத் தரித்திரர் போன்ம கிழ்ந்தார். ௨௧

இதுவெமக் கீந்த தைய வெந்தவ வலியோ வல்லான்
மதுதப வழித்த நாதன் மலர்கரு ணைப்பெ ருக்கோ
வதுதெளி கில்லேம் யாமென் றாதர வாற்பு கழ்ந்தே
துதிவிர யங்க ளாலே சூதனைப் பழிச்சி னின்றார். ௨௨

புலமலி சூத மேலோன் புகன்றவக் காதை தம்மு
ளலமலி வராக மென்னு நலக்கும புராணத் துள்ளாற்
புலமலி பதிற்றொன் றென்னப் பகருமத் தியாயந் தன்னிற்
சாலமலி காதை யொன்று சொற்றிடப் புகுந்தே னம்மா. ௨௩

என்னையித் தொண்டி லுய்த்த வென்குரு பாண்ம லர்த்தாள்
சென்னியி னுறப்பு னைந்து செப்புவ னெனக்கே தேனுந்
துன்னுமோ வூறு துன்று தென்னுளத் துணிவீ தாமாற்
பின்னிட லில்லா தன்றேன் முன்னிடப் பெயர்த லாலே. ௨௪

புராணவரலாறு புகன்ற வத்தியாயம்

முற்றிற்று.

ஆகச்செய்யுள்-௬௧.

---

## இரண்டாவது

## வராகமூர்த்தி பூப்பிராட்டிக்கு

## அறத்தியல்பு கிளத்திய வத்தியாயம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

முன்னமொரு கற்பமதின் முதுநரலை மிகப்பெருகி மூட வான,
மின்னுமுடித் திரள்களெலா மீனெனுஞ்சொல் விளக்கிளவால் விளங்
கும் பூமா, தென்னுமவ ளதின்மூழ்கி மிககலிவுற் றேயிரும்பா தலத்
து ளேக, வன்னமென வமர்ந்தன்ன மூர்திக்கு மறையறைந்த வழகன்
கண்டான். ௧

கற்பமுடி வாகலினிக் கனைகடல்கள் பரந்திட்டுக் கவிழ்த்த யாவு,
முற்பகலி னிலவுவிப்பான் முன்னியொரு வெண்கேழன் மூர்த்தி யா
கிச், சிற்பரமா யவனந்தச் சிந்துவிற்சென் றவனிமங்கை தியக்க ரடிப்
பொற்பமர்தன் னெருகோட்டி லிவர்வித்து வெளிப்போந்தான் புன்
கண் டீர்ப்பான். ௨

துனையலது சேர்ன்மைதனி னிகரில்லாத [illegible] றைதய
றன்னை, நனைமருவு துழாய்முடியோன் வராக[illegible]க்கொணர்ந்து
நாட்டு மாற்றல், வினையகன்றேஜ நிறைதக்கவை [illegible] கற்பமென

விள்வார் பூமி, சிலைபொதுளிப் பல்பொருளுஞ் செறிந்திட்ட பின்னி கழ்ந்த செய்தி சொல்வாம். ௫

மன்னுமிடர் கடந்தபுவி மாதுமுக மிகமலர்ந்தே மாயோன் றன் பா, லின்னவகை யெனக்களித்த வருட்டிறத்தை யெவனெனயா னிசைப்ப லென்றே, பன்னரிய துதிமுழக்கிப் பதுமமலர்த் தாளி ணையிற் பணிந்து தாழுஉ, வன்னவன்சொற் படிவாம மமர்ந்திருந்தே யிவ்வண்ண மறையு மன்றே. ௬

ஆக்குவீ ருலகளைத்து மயனுகி யாக்கியவை யலையா வண்ணங், காக்குவீர் தானன நிலைநின்று காக்குமவை கடைநா டன்னிற், போக் குவீ ரானுகி யுமைபபுகழ லென்றரமே புன்மை யேனு, னுக்குவார்க் கருள்சுரக்கு நும்மடித்தொண் டுடையனன்றே நுவலுங் காலே. ௭

நல்லறங்க டமையுரைக்கக் கேட்டுவக்கும் பேற்றையுறு நலத் தாற் பண்டே, சொல்லருநுஞ் சிடையா யிருந்தனனு லன்றியுநற் றொழும்பி னுலே, யெல்விளங்கு மடிச்சியுமா யினனகலா துமையிதயத் திருத்த லென்று, மல்லலங்கு திண்மையினுன் மனையாகி யும்வதிந் தேன் மகிழ்வ டைந்தேன். ௮

## பூப்பிராட்டியார் சேதனுச்சீவனம் விரும்பல்.

என்னகத்தோ ரெண்ணமுளா ததுதேவ ருளமறியு மேனுஞ் சாற்ற, வுன்னினனிங் கெனைப்பண்டு போனிறுவி யுயிர்வகைக ளுதிப்பித் தீர்நீ, ரன்னவைக ளறங்கடையி னலையாதும் மடிக்கமல மண்மி நிற் கப், பன்னுமதற் குளசூழ்ச்சி யொன்றுதொழுத் தைக்கினிது பகரல் வேண்டும். ௯

மேற்படி வேறு.

அறநெறிப் படர்ச்சி யெண்ண மஃதிடக் கொடிய தாய
மறமலி கலியி லோங்கு மன்னுயி ரனைத்தும் வேட்டுத்
திறமுட னியற்ற வல்ல செய்யகா ரியம தாகி
யுறமிக வெளிய தாகி யுற்றிட வேண்டு மஃதே. ௧௦

(௮) சிடை-சிஷ்யை. (௧௦) படர்ச்சி-சிந்தனை.

என்றடி வணங்கி யைய னெழின்முக மலரை யேறிட்
டொன்றுதா டடக்கைகூப்பி யொடுங்கியே நிற்றல் காணூஉக்
குன்றெனப் பணைத்தெ ழும்பிக் கொம்பினை வம்பி யற்றும்
பொன்றிகழ் முலையாட் கையன் பொள்ளெனநகைத்துக்கூறும்.

வரியரி நறவு மாந்தி வதிந்திடப் பெற்ற கூந்தற்
றெரிவைநீ யினைய வாறு தேர்ந்திடாய் போன்று நம்பா
லரியவிம் மந்த ணத்தை யறியவா தரவு பூண்ட
துரிமையி னின்ம கார்பா லுற்றவா தரவே யாமால். ௧௰

மக்களுக் காயே யன்றி மற்றுளா ரவரே யன்பிற்
றொக்கநல் லறத்தி னுய்ப்பார் தோமறு செயலை கேட்ட
திக்கருத் தினில்யா மேனு ளியம்பிய வறங்கள் பல்ல
வக்குழாத் தின்று சில்ல வறைகுது மணங்கு கேட்டி. ௧௧

## வராகப்பெருமாள் கைங்கரியவிசேடங் கழறல்.

### கோச்சகக்கலிப்பா.

மறைகளெலாம் விளக்கியிடு மாவறங்க ளெவற்றினையு
நிறைகுணத்த ரிருவகையி னிலவவிரித் தெடுத்துரைப்பர்
பறைதரினற் பாதரும மபரவற மெனப்படுமான்
முறைபடுத்த வவற்றுள்ளு முந்தியது முந்தியதே. ௧௨

அதுகூறு பலபடுமா லவற்றுள்ளுஞ் சிலபுகல்வே
மதுகூறு படவழித்தே மன்னுசின கரத்தினிற்செய்
விதுகூறு புரைகோட்டா மயமெழுக்குக் கோரடிக்கேய்
வதுகூறிற் பத்தரா யாயிரமாண் டமர்ந்திடலாம். ௧௩

ஆருமா றிரண்டாண்டு தாசரிப்ப ராயினவர்
பேரியலு நற்குடியிற் பிறந்தினிதி னம்மடியை
யோரிறையு மொருவுகில ராய்வழிபட் டடலொழியிற்
சீரியநற் குசத்தீவிற் சென்றுசெனித் திடுவான்றே. ௧௪

பன்னுபல போகங்கள் பளகிலா துறத்துய்த்தே
யன்னவிடத் தயுதமாண் டமர்ந்திட்டிக் கருமயுவி

மன்னியரு மன்னவராய் மதிக்குடைநீ ழலிற்பொலிந்து
சொன்னவெழு வாய்த்தொண்டைத் துகளறவேயாற்றுவரால்.

நமைவிதந்து நவினூலி னல்லவா தரவதனைச்
சமைவர்நமக் காமவைகள் சாலவிரும் பிப்புரிவர்
கமைபெறுவ ரிறுவாயிற் கலிவிலகி நம்முழைபுக்
கமைவரவர் பேறிதுவென் றறிதிமட மயிலன்னாய். கசு

வடுவகிர்ந்த நெடுங்கண்ணாய் மற்றுமிது கேட்டுணர்தி
தொடுமுன்னைக் கருமமதைத் தொடங்கினருக் காமயத்தைப்
படுதொலையி லிருந்தேனும் பக்கலிருந் தாயினுமே
யிடுபவர்க ளோரடிக்கா யிரவருட மிருவிசும்பில். கள

விண்ணவர்கோ னறுமுறுப்ப விழைபோகந் துய்த்தபினர்ப்
பண்ணவர்கட் கிடமாகப் பகர்தருசான் மலித்தீவி
னண்ணியொரா யிரமலது நூறாண்டு நனிவாழ்ந்து
மண்ணகத்தி லரசுரிமை மன்னிடுவர் மதிமுகத்தாய். கஅ

நூலுணர்வு நனிபூண்டு நோன்மையொடு வள்ளன்மை
சாலுமவ ராயரசு தாம்வெறுத்து நம்மையுனுஞ்
சீலமிகு யோகத்தாண் டாறிரண்டு செலுத்திப்பின்
னேலவே நம்பக்க லிருந்திடுவ ரீதுணராய். ககூ

ஒறுத்தாரை யும்பொறுக்கு முளமுடையா யின்னுமொரு
மறுத்தாண லாதவகை வகுத்திடுவே மனங்கொண்ணீ
யறுத்தாசை விழைவிலெமக் கருக்கியமா திக்குதவச்
சிறுத்தாரு மொருகாக நீரேனுந் தெளிந்திவோர். உ0

ஒருதிவலைக் கொவ்வோரா யிரமாண்டன் றிற்பறவை
மருவுபெயர்த் தீவகத்தின் மறுவற்ற நெறியொழுகிக்
கருதரிய சுகாநுபவங் கழிப்பிகிலத் துதித்தெவையு
மருவருந்துத் திறவுபுண் டடைந்திடுவர் நம்மயலே. உக

(உக) அன்றிறப்பறவைத்தீவு-இ[illegible]சத்தில்.

காம்பனுக்குந் திருத்தோளாய் காமருநம் மாலயத்துக்
காம்பரிசு திருவலகு மாமயத்தா லிடுமெழுக்கு
மேம்பலகற் றிடச்செய்யு மெழிற்றீப வாவலியு
மோம்பியசெய் யியவிழைவா ருறும்பரிசை யுரைத்திடுவாம்.

ஆவரணத் தலகிடும்வீச் சொன்றினுக்கா யிரவருட
மேவுசுவே தத்தீப மேவியவ னுறைதருவோ
ரேவல்செயத் தகுதியரா யிரும்போக வகைபலவு
மாவலறத் துய்த்தமர்வ ரவர்நிலைமை யறைவரிதால். உ௩

சன்மார்க்க நெறிநின்று சமதமமா தியபயில்வுற்
றென்மார்க்க ராமடிய ரினமகலா தேபயின்று
பன்மார்க்கத் துட்டுளைந்து பயனறியா மாக்களெனத்
துன்மார்க்க ராகாது சுத்தகுண சித்தருமாய். உ௪

எவ்விதத்து மபராத மேயாமே பாவனமா
யவ்விடத்தி லுளபோக மனுபவித்துச் சுவர்க்கம்புக்
குவ்விடத்தி லுறுகற்பச் சோலையிலூர் வசியரம்பை
செவ்விபெறு திலோத்தமைமே னகையாதி தெரிவையர்பால்.

பன்னாட்பல் விதபோகம் படிந்துவெறுத் தேபடியின்
முன்னாளிற் போந்துலக முழுமயக்கத் தாழாமே
கன்மாரி தடுத்தாவைக் காத்தளித்தோய் காக்கவென
வென்மாட்டி லன்பிருவி யெமையடைவ ரேந்திழையே. உ௬

இத்தொண்டை யிழைத்திடுவோ ரேந்திழைய ராயிடினு
மத்தொண்டிற் குரியநல மார்ந்திடுவ ரையமுறே
லெத்தொண்டு மெமக்கினிய வேயெனினு மெடுத்தியம்பி
லுத்தொண்டு ளுழுவப்ப வோங்குவது நல்லிசையே. உ௭

வைகறையிற் றுயிலொரீஇ வனமூழ்கி நாமுவப்பக்
கைகலவும் பண்ணமைத்துக் கரிசறுநம் புகழ்ப்பாட
மைகவினு மம்பகத்தாய் மாறுமுவ லிசைப்புலவர்பா
லைகரமின் றருமா காளுநனி சூழ்க்குமர்வம.

கண்டுயிலா தெல்லியினுங் காமுறா தொருபலனுங்
கொண்டுசெவி யேற்கினுநாங் குறிக்கொளா தேயுலக
மெண்டரவே புரந்திடுசெல் லெண்ணமுற விருந்திடினுந்
தொண்டுவழு வாதுநஞ்சீர் தோமறவே யாராய்ந்து. உகூ

வெள்வார்ந்த வேற்றடங்கண் மடவரனின் மேன்மையும்பொற்
புள்வார்ந்த கொடியுடையேம் புகழுமொருங் குத்தொடரிற்
கள்வார்ந்த தெனவன்பிற் கனிவோடு தொடுத்திசைக்கி
னுள்வார்ந்த தலைமைபெறீஇ யோங்கநனி புரந்திடுவேம். ௩௦

பாட்டிசைத்த லேநமக்குப் பண்ணிடுநற் றொண்டாகும்
பாட்டிசைத்த லேநமக்குப் பண்ணிடுநற் பூசையுமாம்
பாட்டிசைத்த லேநம்மைப் பண்ணியிடுந் தோத்திரமாம்
பாட்டிசைத்த லேநந்தம் பக்கலிருந் திடச்செய்யும். ௩௧

வன்னமோ ரொன்றிற்கு வானநாட் டமர்போகம்
பன்னுமா யிரமாண்டு பளகறவே நுகர்ந்திடுவ
ரன்னநாட் டினிலமர்வோ ரியாவரினு மதிகரித்த
நன்னர்மா மையுங்குணனு நண்ணிடுவர் நம்மருளால். ௩௨

நடக்கைகுவித் திந்திரன்றன் சாரவிருந் தேபரவ
வடக்கியவைம் புலமுடைய ராய்ப்போக வாஞ்சையுறா
தொடுக்கமுடன் வாழ்ந்திடுவ ருப்போகத் துற்றழுந்திக்
கடக்கருமச் சதமகன்போற் கலங்குவரோ கலங்கார்காண். ௩௩

மகவானு மமரர்களும் வாழ்த்தெடுக்க வளர்போக
மிகவாது பெற்றுடைய ராயிடினு மெமையென்றுந்
தகவாகத் தம்முளத்திற் சாரவிருத் தித்துதிப்பார்
சகவாழ்வை மதிப்பாரோ தமையுணருந் தன்மையினோர்.

---

(௩௦) வார்ந்த-வெள்வேலென இயையும். உள்வு-உள்ளுதல்.

(௩௨) வன்னம்-வர்ணமென்னும் வடமொழிச்சிதைவு; எழுத்து

நமக்கிதரா தியுமியற்று நற்கரும நழுவவிடார்
நமக்ககித ரேயியற்று நற்கரும மொருவிநிற்பார்
தமக்கொருவ ரீடிலரென் றிறுமாந்து தருக்கடைவ
ரெமக்கவரெஞ் ஞான்றுமினைத் தவராகா ரிருநிலத்தே. ௩௫

தமைப்பாடி யிலோகரெலாந் தகுபுகழ்சாற் றிடவுமவ
ரெமைப்பாடி யுகப்பிப்பூ ரிவரையவ ணீக்கியென்று
நமைப்பாடு நித்தியசூ ரியர்களொடு நண்ணிடுமா
றிமைப்பாடி லாநந்த வெழிலுலக மிருத்துவமே. ௩௬

ஏத்தியிருப் பவர்தவமே யெம்மைநீ ராட்டியலர்
சாத்தியிருப் பவர்தவத்துஞ் சான்றதுதண் மதிமுகத்தாய்
கோத்திரமுங் குலவிருதுங் கொண்டவரு ணமுநிலையுந்
தோத்திரம தாகுமோ தொழும்புவிரும் பிடுமெமக்கே. ௩௭

கோலவடி வானபிரான் குயிற்றிடவின் னனமுகந்தே
யாலமோ வம்புயமோ வம்போநல் லசியோவென்
றேலவுரை செயுநயனத் தெம்மோயண் ணலைவணங்கி
ஞாலமுய வாழ்தவெடுத்து நன்குநவிற் றிடுமென்றே. ௩௮

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கொழுதிவண் டலம்புஞ் செய்ய குல்லையை மிலைந்து முல்லை
முழுதையு முரிமை யாக்கொண் முதல்வனும் மியல்பு மன்பர்
பழுதறு தொண்டின் பன்மைப் பான்மையு முனிவர் தாமுந்
தொழுதகு மறையும் யார்க்குந் தொகுத்தினி துரையா நிற்ப.

அன்னண மன்றி யென்பா லமரிய வன்பி னீரே
பன்னிடப் பெற்றே னம்ம பலபடப் பகர்ந்த வற்று
ளன்னிலை யதுவா யோகை நுமக்குநல் குவது நாடின்
சொன்னிலைக் கீத மென்றே துகளறத் தெளிதந் தேனால். ௪௦

அதுபர தரும மாகு மடிகளுக் கெனவு ணர்ந்தே
கதுவிய வன்பிற் பாடிக் கருதுநும் மருள்பெற் றாயார்

புதுமைசூ பூனைய தொண்டர் புகாருஞ் சரிதந் தம்மூண்
மதுவென வினிக்கு மொன்றை வகுத்திடவேண்டு மென்றாள்.

இருவகைப் பற்று நீத்த வெழிற்றவ முனிவீர் மாயோ
னொருவலி லவனி மங்கைக் கறத்தியல் புரைத்தல் சொற்றும்
பிரிவினம் பாடு வாரோர் பிரமராக் கதன்கோட் பட்டுப்
பருவா லுழந்த வண்ணம் பரிவினிற் பகர்வங் கேண்மின். ௬௨

அறத்தியல்புகிளத்தியவத்தியாயம்

முற்றிற்று.

ஆகச்செய்யுள்—௬௩.

## மூன்றாவது
## நம்பாடுவார்
## பிரமராக்கதன்கையிற் பிடிபட்டவத்தியாயம்.



### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஐயனல் லன்பு கூர்ந்தே யம்மையின் வதனம் பாரா
வைவள மென்ன லாகு நகுமொழி யணங்கே யுன்றன்
பொய்யக லன்புக் கார்வம் புரிந்தனம் புகலு கிற்பே
மையலின் றதனைத் தேர்ந்து மனத்தினிற் கோடி யென்றான். க

பாம்பணை யுடையா ருக்கப் பாம்பென நாவி ரண்டுண்
டாம்புய னிலாத தீதென் றயர்த்திட லுன்மாட் டிங்ங
னேம்பலோ டுரைக்கும் வார்த்தை யென்னவு முள்ள லென்றுந்
தேம்பலில் லாத வுண்மைச் செம்மொழி யென்னக் கொள்வாய்.

தழையெற்றித் தெறிர்த்து மற்றைக் குழிமையுஞ் சிதர்த்துக் காட்டி
[illegible] யுறைபுகப் புகுத்தி யன்பர்

பிழைகரு தாதி ரங்கிப் பிறங்கிடும் விழியாய் தென்சார் [டால்.
தழைவண மடர்ந்தோர் பொற்றைத் தனிமகேந் திரமொன்றுண்

## மகேந்திரமலை.

ஐந்தழ னடுவி ருந்து மையறி வடக்கி யுங்கீழ்ச்
சிந்துறு பன்ன மோடு சீவளீ யம்பு சித்து
நைந்திட லொருவி நம்மை நாடொறு மனனி ருத்தி
யுந்துறு களிப்பின் வாழ்வோர்க் கிடமதா யுறுமவ் வோங்கல்.

## திருக்குறுங்குடி வைபவம்.

உளவிதன் சார றன்னி லொளிர்பய நதியொன் றோடி
யளவிய தெனுது வாரி யன்பனை மகிழ்ந்து புல்லும்
வளவினோர் பன்ன சாலை குறுங்குடி யெனவ குத்தே
களவிலா தியாமு நீயுங் கவின்றது மவண்கண் டாயே. ௫

வயிணவ நம்பி யென்ன வதிந்தயாம் மலைமே னம்பி
செயிர்தப நின்ற நம்பி செவ்விதி னிருந்த நம்பி
பயில்வுறக் கிடந்த நம்பி பாற்கட னம்பி யென்ன
வியல்வுற வைந்து நம்பி யாகியு மினிதி னுற்றேம். ௬

அத்தல முன்னி னோர்க ளித்தல னமரா ரையம்
வைத்தமின் னிடையாய் கேண்மோ வருபய நதியின் மூழ்கிற்
சுத்தநம் விரசை நீரிற் றோன்றுவர் சொல்வ தென்னே
யெத்தலத் தினுமிக் கார்வ மெமக்குள தத்த லத்தே. ௭

மன்னிய வாட லாலே குறுங்குடி யென்னின் மற்றோர்
துன்னுவர் வான நாட்டிற் பெருங்குடி துதைய நிற்பர்
பன்னிரா மத்த லக்குப் பயணமென் றிடிலன் னோர்கள்
கொன்னுனை யாழி யங்கைக் குழகனெம் மூழையி ருப்பார். ௮

## (௭) பயநதி-ஸ்நாநதி.

## நம்பாவோர் வைபவம்.

குமரிநா டமர்ந்த வந்தக் குறுங்குடி தன்னின் முன்ன
ரமரிய சிறுபா வத்தா லந்திய குலத்தின் வந்தோ
னமரிட மன்பு பூண்ட நல்லவ னெல்லு மல்லுந்
தமரொடு நமையே போற்றுந் தன்மையன் புன்மை நீத்தோன்.

சேறிகுறுங் குடியா மென்று செப்பியே செய்மை நிற்ப
னறிவினி னமைய மைப்பன் யாழினிற் பாட்ட மைபயன்
பிறிதொரு பற்று றாது பெட்பொடு பாடி வாழ்வ
னறியமென் போது பூத்த நரலைநேர் குழலி கேண்மோ. ௧0

கதிருதிப் புக்கு முன்னர்க் காமரு தீர்த்த மாடி
யெதிரிருந் துருகிப் பஞ்ச கேதக விமான மேறிட்
டதிரொலி யுறாது மெல்லென் றமைவொலி காட்டி மீட்டிக்
கதியொடு கைசி கப்பண் கரைகுவன் கரையு நெஞ்சன். ௧௧

நமையலா தியாரை யேனு நாடியே பாடா னற்று
லமைவுறு மவனம் பாடு வானென வறையு நாம
மிமையவர் தாமோ நாமு மிசைத்திடப் பெற்று னந்தச்
சிமையநேர் புகழான் சீர்த்தி யிற்றெனச் செப்பு வாமே. ௧௨

அலகிட முடியா நந்தஞ் சீர்த்தியை யாமே கூற
வலமல தியாவ ரேனும் வகுத்திட வல்ல ரல்லர்
சொலவல மல்லே மன்றோன் சொற்பெறு சீர்த்திப் பாடு
நலமலர்க் கோதாய் நன்கு நவிற்றுது மொருவா றிங்ஙன். ௧௩

ஐயிரு வருட மங்ங னன்பொடு நியம மாகக்
கையினி லியாழும் வாக்கிற் பாட்டுமாய்க் கதிக்கு நாளில்
வெய்யதேண் மதிவெண் பக்க வியனேகா தசியி னந்நாட்
டெய்யறு மிரவு தன்னிற் றெழுதிடத் தனித்துப் போந்தான். ௧௪

உறக்கம்விட் டெமது நாம முச்சரித் தொருயா மந்தா
னிறக்கவே யாரும் யாவு மிருந்துயி லுற்ற காலைத்

துறக்கமே லாகுஞ் சூழற் றன்னுவான் செலுங்கா லாங்குப்
பிறக்கமில் பிரம ராக்க சென்பவன் பெயர்ந்து கண்டான். ௧௫

## பிரமராக்கதன் பற்றல்.

பசியினி லுணங்கு மென்பாற் பரமற்குப் பரிவுண் டாயிற்
றசிமெயி றதுக்கி யின்னே யிவனுட லருந்து வேனென்
றொருசிவுட னணுகி யன்ப னுளாந்திடக் கிடமா றங்கை
விசையினிற் பற்றி னானுள் ளுவப்புற விருந்து கொள்வான். ௧௬

விடக்கினை மிசைந்து திண்மை மேவினோ னாகை யாலவ்
வடக்கமி லரக்கன் றிண்ண னாயின னன்ப னாவான்
கடக்கரும் விடய போகங் கருதிடா தென்று நம்மைத்
தொடக்கற நினைந்து நையுந் தொழின்மையின் மெலிய னானான்.

தவமியற் றினர்க்கே சாலத் தவமுங்கை கூடு முன்னைத்
தவமிலார் தவத்தி னாக்க லவமெனத் தக்கோர் சொல்ப
தவமிலாப் பிறந்தை மேய வெற்கிவன் றன்னை வெல்லத்
தவமுயன் றிடினு மாகா வெனமனந் தளர்வுற் றானால். ௧௮

இருபிறப் பாள னாகின் மறையினோர் மறையி யம்பி
யருகணை யரக்க னாவி யகற்றுவித் தகல்வ னந்தப்
பெருகுபே றின்றி மற்றுந் திண்மையும் பெறாத வாற்றா
லொருதிரு வட்ட வாழி யுத்தம புரக்க வென்பான். ௧௯

கதியறு வோர்க்குத் தூய கதியரு டெய்வ மேயென்
விதியிவ ணிவ்வா றுய விதிவதி பதிய தூய
அதிநய வம்பு யங்கொ ளழகம ரிலஞ்சி யாயென்
சதிசெய லழகன் றென்பான் றரிக்கிலன் றனிய னாவான். ௨௦

பரமுனக் காகு மென்று பன்னியே நமைப்ப ணிந்து
வுரமலி யரக்க னுள்ள மெரிமுன ரிழுதை யொக்குந்
தாமுற விரந்து வேண்டித் தப்புவ லெனவ வித்துத்
திரமிகுந் தினிய வார்த்தை செப்பினன் சிறந்த வன்பன். ௨௧

அல்லவை தேய நாளு மறமிக வளரு மென்று
நல்லவர்க் கணிய தென்று நல்லவர் கூறும் வாய்மை
செல்லிவர்ந் தனைய தோகாய் தேர்ந்தினி யனவே கூற
மல்லடர்த் திட்டே மன்பன் மற்றிது மொழிய லுற்றான் ௨௨

## பிரமராக்கதனுக்கு இனியன வியம்பல்.

### கொச்சகக்கலிப்பா.

வட்டவிழி கொண்டென் மணமறுகக் கட்டழலைக்
கொட்டுங் குரூர மதுதணிவாய் கோபால
னிட்டமிகு சேவைநிதஞ் செய்துதுதிப பேறுகின்று
நட்டமுறு தந்நியதி நாடிவிடை நல்கிடுவாய். ௨௩

கைக்கொண்ட யாழினையுங் காணுயோ காயாம்பூ
வைக்கொண்ட நன்னிறத்து மாயவனுக் காளானேன்
மைக்கொண்ட மேனியனை வழிமறிகொள் ளேல்விடுப்பா
யக்கொண்ட லனையவனை யாதரவிற் பாடிடவே. ௨௪

### கலிவிருத்தம்.

என்றின்னுரை பலகூறவு மிகல்கொண்டவ ரக்கன்
றன்றுன்மதி தனையேகொடு தடிவாயெனு லோடு
மின்றுன்றிய விடையாய்வியன் மெய்யன்ப னுணர்ந்து
கன்றுந்தர மில்லாதிது கழறத்தொடங் குறுமால். ௨௫

அரக்கக்குல வரசேயெனை யாதுக்ககப் படுத்தா
யிரக்கக்கசி தில்லாயிஃ தென்னென்றனு மரக்கன்
சிரக்கம்புரு றத்தர்த்தம லைதுத்திடுக் கிடவே
வரக்குன்று வெடித்தாலென வாய்விட்டுவ குப்பான். ௨௬

## அரக்கன் கடுமொழி கழறல்.

காரொன்றிய கண்ணன்புகழ் கரைந்தேயொரு பஃதாண்
டேடொன்றியி ளைப்பின்றியி ருந்தாயிவண் யானே
பாரொன்றிய வுணவின்கொரு பதினாண்மிக முயன்று
தேரொன்றிய சோராதுபட் டினிவிட்டயர் குவனே. ௨௭

(௨௭) பட்டினிவிட்டு-பட்டினிகொண்டு.

யான்செய்தவ மதனாலுனை யீண்டெய்த்திடத் தெய்வங்
கான்செய்நறுந் தொடைசூடிய யாழைக்கரங் கொடுநீ
தான்செய்நகை யொடுபோந்தனை சலிப்பாலினித் தணப்பா
னென்செய்யுமி னேக்கின்றனை யுனக்கீதிய லாதே. ௨௮

முனம்வந்தனை யென்றன்கர முற்றுப்பெற நின்றாய்
வினையின்றிற மீதென்றுவி ளங்காய்விடு கில்லே
னினைகின்றதி லாகக்கட வதுவேதுமின் றென்றே
நினையின்றுன துயிரந்தர நேர்வித்துட றடியா. ௨௯

பண்டிப்புடை வீங்கப்பல தடியுண்டுதி ரத்தை
மிண்டிபபரு கிடுவேனயர் வினைமீட்குவ னினமாய்
மண்டிப்பிற மயல்சூழ்வுற வானுறுச ரிபபேற்
கண்டிப்படி வசனித்தவர்க் காணேனிது காறும். ௩௦

எனவோதிய நனியீரமி லாச்சொற்களை யெம்மை
மனமீதினி லிருத்தும்மடி யானன்கும திந்தே
வனமீதல மருவோய்வினை மண்டிக்கத றூறுவா
யுனைவேண்டியு ரைக்கச்சில வுற்றேறெனை வுரைக்கும். ௩௧

## நம்பாவோர் பின்னும் இரவுரைகூறல்.

மன்னும்மகர் மேலார்வம் வகித்தேயவர் பிழையைத்
தன்னம்மென வுன்னிப்பெரு தயைகூரு மணங்கே
துன்னுஞ்சுதைக் கூழின்சுவை மூழைத்துணி யாதா
லென்னும்பய னுணர்ந்தேபினு மிசைபபான்றுணிந் தனனால்.

## எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பிரமராக் கதனே யானுரை செய்யும் பேதுறு வார்த்தையை வாய்மை, வரமிகு மொழியே யெனமனங் கொள்க மருட்டிடக் குயிலுவ னென்றே, யுரமிசைக் கௌரது நம்புக கமல வுற்பவ னமைத்தவா றென்னைத், திரமதா நுகர்க வீதெனக் குவப்பே யாயி னுஞ் செபபுவ ளென்றே. ௩௨

---

(௩௦) மயல் - பேய்.

காவலர் அருணவா னிரப்பியே தவாது போற்றினுஞ் சடலமற் றோர்நா, ளாலவே மறைதன் மெய்ம்மையே யிங்ங னிருப்பது பொய் மையென் றுணர்தி, காலமா யிடினல் லுறவினே ரேனுங் கலங்குறு தீமமே சேர்ப்பர், நீலமார் மேனி நிருதவென் னுடல நின்றனக் காகுமேல் வியப்பே. ௩௪

எரியெம தென்ன நரியெம தென்ன வினத்தவ ரமதெனச் சாலப், பரிவுறுந் தாயர் தந்தையர் தமதாப் பாதுகாத் திடுவமே யன்னோர், புரிகொடுங் கொலைசெய் துயிர்கவர்ந் தேகப் புரப்பவ ரிலா தழி யுடம்பை, விரிபசி யுடைய வுனக்குரித் தாக்கின் மிகுபலன் வருமென வுணர்ந்தேன். ௩௫

முள்ளரைக் கமல மேயாங் கையைத்தம் மொய்ம்புறு மார்பகத் திருவிக், கள்ளவிழ் துளபப் பசுந்திரை யிட்டுக் கவுத்துவ மணி விளக் கேற்றி, யுள்ளக முவப்போன் சினகர மேவ லுற்றன புன்மரங் களுமே, யெள்ளிடும் புறம்பேன் யானுனக் குணவா வியைவது மிகுநல னலவோ. ௩௬

புலையனும் விரும்பாப் புன்புலா லுடலைப் பொற்புற நின்றனக் காக்கின், விலைமிகு மணியைப் பெற்றதன் பலனை மேவுறக் கொண் டவ ஞவே, னலைவுறு தளிய னறைமொழி கொண்மோ வரியதோர் நியமமுண் டெற்கே, நிலைபெறு மதுதான் சாகர விரத மாமத னிலை மைமற் றுரைப்பல். ௩௭

அகிலரா யகரு யணர்தசா யியுமா மச்சுத னுவக்குமா றுயினீத், துகிரிளல் வருடி யாழினை யிசைத்தே யுறுபுகழ் நாளும்பா டிடுவன், சுகிர்தமா ரேகா தசியினி லருந்தா தொழிகுவன் றுயிலும தின்றும், வகிர்மதி யனைய வெயிறுடை யரக்க மற்றது முடித்திடல் வேண்டும்.

அதுமுடித் திட்டு மீள்குவ னுனக்கே யரும்பசி யகற்றுண வாவ, திதுதவ றுவுமென் றென்னலை யைய விதுமுடித் திடினல னுறு திசெய நினைய நன்னனி பரிதி காவலிச் சிரக்கினி னடக்க,

(௩௭) சாகரம் - விழிப்பு.

பதியினின் னருளைப் பங்குகொண் டிடுவை பண்பெனக் கேட்கிவென்
னுரையே. ௬௯

பழமறை நாளு முழங்கியே துதித்தும் பற்பல வாமருந் தவத்தை,
விழைவினிற் புரிந்து மிம்மியு முணரா வித்தகன் றிறத்தினி லுடலைக்,
குழைவுற வளத்தைச் செய்யவார்த் தையினைக் குழுமுறச் செலுத்தலி
னன்று, ழுழுவலின் மனமெய் மொழிகளைச் செலுத்து வோர்க்குப
கரித்தலென் றுணர்தி. ௭0

நிருதனே யென்ற னியதியை யவல சேரிடா தாற்றுத னினைக்
கோர், விரதமாக் கொள்க வெனபபல பகர்ந்து வேண்டினு னம்மையே
வேண்டுஞ், சரதவாய் மையினு னீதுண ரரக்கன் சாதனு குவனிவ
னென்றே, வரமிக மதித்துக கொதித்திடா தொருசொல் வழங்குவன்
றழங்கொலி யவிததே. ௭௧

## அரக்கன் பின்னும் கூறல்.

நீசநீ கூறு நேசவா சகத்தி னெகிழுவ னுளனென நினையல்
பேசிய துனது குலக்குரித தான பேச்சிது பயனுறு தெனவே
யோசியா துரைத்தாய் கூற்றுவ னங்கை யுற்றுயிர் தவறினு மின்று
பாசமா மென்கைப் பட்டநீ தவறல் பஃறிறத திலுமிலை யென்றான்.

ஆவியுய்ந் திடநீ நவலுவ தீதென் றறிந்தன னங்கைதப் புவை
யேற், கூவியென் முன்னர் வருகுதல் பொய்ம்மை குறிக்கவும் வேண்
டுமோ விதனைச், சாவிதற் கென்ன மதியுள தெனவுஞ் சினமொழி
யான்மெலத் தணப்ப, வோவிது புகன்று யுன்னுளக் குறிப்பிங்
கொன்றுமுற் றுதென வுணர்தி. ௭௨

நாளைவாய்த் திரோல லமிழ்தினு மின்று கண்ணிடும் புற்கைகன்
றென்றல், வாளையு மருட்டும் வாளைசேர் விழியார் வகுத்திடு முது
மொழி யதுகாண், டாளினி லென்னை வெருட்டியே யாவி தப்புற
துணிவதி தறிவேன், கோளினை யிழைத்த றவிர்குதி யுடலைக் கோறல்
செய் துண்பது தேற்றம். ௭௩

எவ்வமீ தகல்வா னென்றனை யிவ்வா றிதமொழி யாண்மிக வெரு
ட்டி, யிவ்வயி னக்ன்றே புயுனுறு தேக்கி னியக்கி நினைக்கினை

போலுந், தவ்வெனத் தவறு குறுகுவ தோர்ந்தோர் சார்குவ ரோபினு மவணே, யொவ்வுரு விந்தக் கிறிமொழி யுரைத்தற் குனதுள மஞ்சில தந்தோ. ௪௫

நின்னுரை கேட்டு நெகிழினு நெஞ்சம் பசியினு னினைவிடத் துணியா, தின்னினித் தடிந்தே யுயிரினை யியமற் கிகுவ னுடலினை யீர்ந்து, கொன்னுனைப் பற்க ளதுக்கியீ ருளினைக் குதட்டுவ னுதிரமாந் திடுவ, னென்னலு மன்ப னிராக்கத னிரக்க மின்மையை யெண்ணினொந் தனனால். ௪௬

## கலிவிருத்தம்.

கோல நீடுசடை கோமுனி வீர்காள்
கால னேர்பிரம ராக்கதன் கையி
னேலும் வண்ணமி திசைத்திடு சூளாற்
சாலு மன்பனகல் சால்பு கிளப்பாம். ௪௭

பிரமராக்கதன்கையிற்பிடிபட்டவத்தியாயம்

முற்றிற்று.

ஆகச்செய்யுள்-௧௪௦.

---

நான்காவது

## நம்பாடுவார்

## உறுதித்திற முரைத்தகன்ற வத்தியாயம்.



## கலிவிருத்தம்.

மானுறழ் மகிமாதே மற்றொரு வேட்கையிலா
தானமி னந்தொண்டி னுற்றிடும் விழைவேகொண்
மோனம துறுமன்பன் முற்றிடு மிகல்யாது
தானவன் றனைநோக்கிச் சாற்றுத லுற்றனனால்.

மொழிமொழி கேட்குதியான் முன்னயர் கருமத்தி
னழிவறு சேடத்தா லந்திய யோனிசனித்
திழிவுள னுயுலகத் தியலினு மெம்பெருமா
னொழிவறு மருணோக்க முற்றிடப் பெற்றுளன்காண். ௨

அன்னதொர் நோக்கத்தா லடைந்தனன் மெய்ஞ்ஞான
நன்னர்கொ ளுள்ளத்தோர் நலனது நண்ணினனு
லின்னத னுன்மாற்ற மிதுவமு வேன்மாயன்
றன்னிய துயினீத்துச் சொலுநிய திமையமுடித்தே. ௩

நின்னிடை வருகுவனு னீயிதி லையமுறே
லென்னிலை யுணர்தற்கிங் கியலுறு முறைதருவே,
னன்னிய னுகிலனு னறையுமிச் சூளுறவை
யுன்னுளங் கொண்டிடுக வெனவலி யுறுத்துவனுல். ௪

வாய்மையின் றூய்மைகூறல்.

நீருறு கடலளவை நீப்பரி தாயமருஞ்
சீரது வும்முலகஞ் செவ்வியி னுறைகுவதுஞ்
சோரும் பலபோகஞ் சேர்வது வும்முயிர்தா
நேருறு வாய்மையினு லெனவுள நினைகுதியே. ௫

காணுறு பலநூலிற் கண்டது வாய்மையலா
லேனுறு மற்றதனி னல்லது பிறிதின்றுன்
மாணுறு மீதோர்ந்தே வகுக்குமெ னுரைதன்னை
நீணய முறுவாய்மை யன்மைய தாநினையல் ௬

இன்னமு முரைசெய்வன் பிறைபுரை யெயிறுடையாய்
மன்னிய மனத்தொடுநல் வாய்மையை மொழிகுவரே
லன்னவர் தவத்தொடுதா னஞ்செயு மவரினுமிக்
குன்னுறு தலைமையரா யோங்குவ ரெனும்வேதம். ௭

புறவிருள் புறமோப்பப் பொலிதரு விளக்கமெலா
மிறமலி விளக்காகா வுள்ளிரு ணடிதோட்டுக்

திறமுறு வாய்மையெனுஞ் செஞ்சுடரோ சான்றோர்க்
கறமிகு விளக்கமென வறைவது மோர்குதியால். அ

## சூளுரை யுரைத்தல்.

யானுரை செய்வதுகே ளாணிரை நனிமேய்த்த
வானவர் வானவனை வல்லேபின் வாழ்த்தெடுத்துக்
கானமர் வாயுன்றன் கடைவரு கிலனேகிற்
றானுரை வாய்மைதவிர்ந் தான்கதி சார்குவனே. க

நன்றிது தீதிதென நன்றுள நாடாமே
யொன்றிய மனனில்லா னுபயன் மனையொன்றிக்
கன்றணி கையானைக் காமுக னுய்வவ்விப
மொன்றிடு வான்றன்மைப் போல்குவ னாகுவனே. க0

நலமலி யுணவின்க ணடுநிலை யோராமே
சிலர்தமை வஞ்சித்துச் செவ்வியி னுகர்வானும்
வலமறை யோர்க்கீந்த வளவய லாதியவா
நிலமவை கவர்வானு நேர்கதி சார்குவனே. கக

நிறைதரு மிளமைநல நேர்ந்துழி மங்கையர்பாற்
றுறைபெறு நல்லின்பந் துய்த்தினி தார்ந்துகுழல்
பிறைபுரை நாளவர்மேற் பிழைபுகன் றேதவிர்வோ
னுறைவுறு பூதியிடை யுற்றிட ருழக்குவனே. க௨

தென்புலத் தவர்க்கூட்டுந் திவசதி னம்போக
மன்புடன் றுய்த்தவனும் மயலவர் பானுறவி
னின்புற வன்னநுகர்ந் திழித்துரை யறிவிலியும்
வன்புற வடையுமதோ கதியிடை வதிகுவனே. க௩

கன்னிகை யைப்பொன்னைக் காமுற விகுவனென்
றன்னவை யுதவானும் மட்டமி சட்டிகுகு
முன்னுறு சதுர்த்தசியின் மூழ்குத லின்றிநுகர்
புன்னெறி யொழுக்கினனும் புகுமள றடைகுவனே. க௪

பற்பல வுதவிசெயும் பளகறு நண்புடையான்
பொற்பமர் மனைவியுழைப் புந்தி புகுத்திமதன்
விற்பொழி மலரம்பால் வெய்துற லெய்தியவள்
கற்பினை நலிவித்தோன் கருனர கடைகுவனே. ௧௫

அவ்வுல கின்புதவும் மாரிய னில்வினைபு
மிவ்வுல கின்புதவு மிறைமகன் மனையினையும்
வவ்விட முயல்கிற்கு மாசுறு மதியோனைக்
கவ்விட வங்காக்குங் கனையிரு ளடைகுவனே. ௧௬

இருமனை வியர்தம்மு ளொருமனை வியினுழையே
மருவிய வேட்கையனாய் மற்றொரு மனைவயினே
பெருகிய வார்வமறும் பேதைசெ லுங்கெறியி
னொருவில னெய்த்தென்பா லுற்றள றடைகுவனே. ௧௭

காதல னன்றியொரு காமுறு தெய்வமிலென்
றூதர வுடையவளா யமர்தரு மனைவிக்குத்
தீதறு போகமிளந் செவ்வியி னினிதளியான்
போதுறு பாழ்ங்கும்பி புக்குழன் றழுங்குவனே. ௧௮

வெய்யவன் வெம்மைதனின் மிக்குழ ருபத்தா
லொய்யென வறலுண்பா னொடிடு மானிரையை
யையென விலக்கமுய லத்தகை யோன்புக்கு
நையுறு பவர்க்கத்தி னணியுழன் றயங்குவனே. ௧௯

சோக்கினை வவ்விடுவோன் சுரையினை நுங்கிடுவோ
னிக்குவ லயதேவ ரின்னுயி ருண்டிடுவோன்
பொக்கம துரைசெய்வோன் புரிவிர தங்கெடுவோ
னெக்கதி யடைகுவர்மற் றக்கதி யடைகுவனே. ௨0

ஊழியி னுயிர்களெலா முலைவற வுள்ளிருவி
யாழியிற் பஃறலைசே ரரிமிசை யறிதுயில்கொள்
பாழிகொ ளாழிசெறி பங்கயக் கையானை
வாழிசொ லாதயர்வோன் வதிநர கடைகுவனே. ௨௧

ஆக்கமொ டழிவிலரு யண்ணினர்க் கண்ணியருய்த்
தாக்கணங் காங்கமலைத் தலைவனு மாய்முத்தர்க்
கூக்கமொ டருள்பஞ்சா யுதனொடு பிறதேவை
வாக்கினி லொன்றென்பான் வதிரா கடைகுவனே. ௨௨

கோத்திர மெனநின்றாய் குறைமதி யெயிறுடையாய்
சாத்திர வகைதேர்ந்து சாற்றிய வென்னுரையை
நீத்திடல் வாய்மையென நினைகுதி யாலென்றே
யேத்தின னெம்மடியை யேத்திடு முரவோனே. ௨௩

கொச்சகக்கலிப்பா.

மையோடு மொளிர்கூர்வேல் வரிவிழியா ளெமதன்பன்
கையோடு யாழேந்திக் கரைந்திட்ட வஞ்சினத்தைப்
பொய்யோடு புல்லாது பொலியுறுதி யெனமதித்து
நெய்யோடு விடக்கருந்து நிருதனிது செய்குவனல். ௨௪

அரக்கன் அகநெகிழ்ந் தறைதல்.

பற்றுகர நெகிழ்த்திட்டுப் பளகறுசீர்ப் பத்தன்முக
முற்றெறிந்து பொய்யுரையா யெனவுள்ள முழுதுணர்ந்தேன்
கற்றுணர்ந்த கவிவாணர் காதலிக்குங் கருமணியை
யுற்றுவணங் கித்துதித்திங் குறுகவென விடைபகர்ந்தான். ௨௫

கேட்டனனம் பாடுவான் கிளக்கரும்பே ருளக்களிப்பை
யீட்டினனு யுடல்புளக மெழநாவுந் தழுதழுக்கப்
பாட்டியலிற் பராபரனைப் பழிச்சிமனத் தாற்றாழூஉத்
தேட்டமுட னெதிர்நின்றோன் றனைநோக்கிச் சிலபுகலும். ௨௬

தண்காட்டின் மேவந்து சரிநடப்பார் தமைவெளவிப்
புண்காட்டும் வாயுடையாய் புரையற்றாய் புகழுற்றாய்
பண்காட்டு மின்னுரையென் பாலுரைத்தாய் பரம்பரனை
பிண்காட்டி யாள்வானை வேண்டியிவண் மீள்குவனே. ௨௭

---

(௨௩) கோத்திரம் - மலை.

நன்றிமறந் தேகுவனென் றன்னுளத்தி னூடற்க
வின்றுதவ மொழிதந்த வெல்லாமெய் யென்றுணர்க
கன்றுபசிக் குணவாகக் கடிதிவண்யான் வந்திடுவ
னென்றுகுறி யெதிர்பயையிது வேறெவன்யா னுரைற்றுவனே.

வாழியநீ யெனப்பெரிதும் வாழ்த்திசைத்து மதித்துறவோ
னூழியெனு மில்லிடும்பை யகன்றவன்பின் னேகினுமந்
நாழிகையே பின்றொடரு மெனநாடா தேகுதல்போற்
றூழியினி லிளைகவர்ந்தோன் றனிநோக்கிப போந்தனனே. ௨௯

கலிவிருத்தம்.

ஒப்பக லருந்தவ முரைற்றுமுரா வீர்கா
ளிப்பரிசு மெய்த்திறமி யமபியக லன்பன்
மைப்புயனி கர்த்தவனை வல்லையி னிறைஞ்சிச்
செப்புரைவ ழாதவகை சேர்ந்தமை தெரிப்பாம். ௩௦

உறுதித்திற முரைத்தகன்ற வத்தியாயம்

முற்றிற்று.

ஆகச்செய்யுள்-௧௭௦.

(௨௮) குறியெதிர்பயை-அளவுகுறித்துவாங்கி, வாங்கியவாறே எதிர் கொடுப்பது.

## ஐந்தாவது

# நம்பாடுவார்

# குறுங்குடிப்பிரானை வழிபட்டு மீண்ட வத்தியாயம்.



### அரக்கனைவிட் டகலுதல்.

### கொச்சகக்கலிப்பா.

*அரக்கனிடம் வாதிட்டே யற்றைநா ளிரவெல்லாங்*
*கரக்கவே யுறக்கமொரீஇக் காதலிற்றன் றவமுடிப்பான்*
*புரக்குமெம தடியிணையிற் புந்தியைமுற் படச்செலுத்தித்*
*தரக்கின்வாய்ப் பிழைத்தோடுஞ் சாரங்க மெனச்சென்றான்.* ௧

*யான்செய்த புண்ணியமென் யான்செய்த புண்ணியமென்*
*கான்செய்யுந் துளவணிவோன் கடன்செய்ய வேமுடிக்க*
*வூன்செய்ய வாயதுக்கு மோரரக்கன் விடப்பெற்றேன்*
*றேன்செய்யு மரைமறையோன் செம்பொறியுஞ் சிதைத்தனனே.*

*என்னப்ப னென்னிறைவ னென்னையாண்ட வெழிற்குருவன்*
*பொன்னொப்பி னருளிருக்கப் புகுதாத பொருளுளதோ*
*பன்னிப்பன் னியுமுலவாப் பழமறையோற் பயந்துலகைத்*
*துன்னப்ப டைத்தளித்துத் துடைப்பான்ற னருள்பெரிதே.* ௩

*என்றுரைத்து நடமிடுவ னென்னூழின் றிறநன்றா*
*லென்றுரைத்துக் கைமுகிழ்ப்ப னென்றவமே தவமென்ப*
*னொன்றுசெயப் பெற்றனமிஃ தொழிவுறமற் றொன்றுபெறீஇ*
*வன்றுயரேய் வதுமுளதியான் மதித்ததுபெற் றேனென்பான்.* ௪

எரியோம்பி யுலகுய்ய வெழிலிவளம் விளைவிக்கும்
பெரியீரே நம்பாடு வான்பெருமை பேசிடவென்
றரமாகா தெனினுமவன் றனிச்சீர்த்தி சொலவேர்பு
புரிகின்ற துளமெம்மான் புகன்றுங்குப் புகலுவனே. ரு

வலைவயினிற் பட்டுழக்கு மறிமானவ் வலைபீறிக்
கொலைபுரிவோ னையுந்தப்பிக் குறித்துழிச்சென் றுவப்பதுபோற்
கலையொடரும் கலன்பலவுங் கடிகாவிற் கொண்டொளித்த
மலையெனும்வன் குடையுடையோன் மருங்கண்மிமகிழ்ந்தனனே.

பாரானைப் பல்லுயிர்க்கும் பரிவானைப் பரிவற்றார்ச்
சேரானைத் தேவர்கட்குத் தெண்டிரையின் சுதையளித்த
நேரானை யோரானை நினைந்தழைக்க நேர்நின்ற
பேரானைக் குறுங்குடிவாழ் பெம்மானைப் பாடுவோன். எ

நம்பாடுவார் துதிசெயல்.

கலிவிருத்தம்.

மன்னு மணியே மதியோர் மதியி
னுண்ணு ரமுதே யமுதுட் சுவையே
கண்ணார் கனியே கனியுட் கனிவே
யண்ணு வடியேன் றனையாண் டருளே. அ

மறையே மறையின் பொருளே மணமார்
நறையே மிகுமம் புயைநா யகனே
சிறையே யுறழி செகவாழ் வமையு
மிறையே தரியே னினியாண் டருளே. கூ

கள்ளார் துளபக் கடியாய் கலுழப்
புள்ளார் கொடியாய் பொருதே நிருத
நள்ளா ருயிரை நலிவாய் நெடியாய்
தள்ளா தடியேன் றனையாண் டருளே. ௧௦

மாமோ தகிகைத் தலவா னவனின்
மீமோ தருமோ வியவிக் கிரம
தீமோ தமயக் கறுசே தனர்சூழ்
தாமோ தரனென் றனையாண் டருளே. ௧௧

நந்தா முதுமா வலிபா லனுக்கு
சிந்தா செறிமா தவர்சேர் திருவை
குந்தா குடநா டகமுற் குயிலு
மெந்தா யெளியே னையுமாண் டருளே. ௧௨

வந்தித் திடுவோர் வயின்மம் மரொரீஇச்
சிந்தித் திடுபே றருள்சீ தரனே
பந்தித் திடுமிப் பவநோய் களைவான்
சிந்தித் திடுமென் றனையாண் டருளே. ௧௩

தேவா திபனே திகழச் சுதனே
மாவா முகல மனுமா யவனே
காவா தயர்வான் கைவிட் டிடனீ
தாவா வடியேன் றனையாண் டருளே. ௧௪

பஞ்சா யுதனே பவர்க்கந் தனிலுந்
துஞ்சா விமையோர் சுவர்க்கந் தனிலுந்
தஞ்சார் குவர்க்கந் தனிலுஞ் சனனத்
தெஞ்சா துறனீத் தெனையாண் டருளே. ௧௫

கோவத் தனமென் குடையா னிரையை
யாவத் தினினீத் தரகண் டலனுன்
மேவப் பெறுகோ விந்தப் பெயரோய்
தாவத் துழல்வேன் றனையாண் டருளே. ௧௬

திகழ்வொன் றுபரத் துவசெந் நிலையோர்
புகழ்வொன் றுகுறுங் குடிபுங் கவநின்

(௧௧) மோதகி-கௌமோதகியென்னும் கதாயுதம்.

னிகழ்வொன் றுறுசந் நிதிநேர் வுபெறு
விகழ்வொன் றெளியே னையுமாண் டருளே. ௧௭

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மாமணி மகுட மின்னு மத்தகம் போற்றி பத்துத்
தாமரை நிகருந் தாள்கை தகுமுக மூர்த்தி சக்கு
காமரு முகம்வாய் போற்றி கடல்புரை மேனி போற்றி
தீமையேன் றனையு மாண்ட திருவருள் போற்றி போற்றி. ௧௮

இன்னண மன்ப னோர்வத் திசைசெறி கைசி கத்திற்
சொன்னயம் பொருண யஞ்சூழ் தோத்திர மிசைத்துப் பாடிக்
கன்னலைத் தவராக் கொண்ட காளையைத் தந்த நம்மைச்
சென்னியின் வணங்கி வாழ்த்தித் திருமினு னிருதற் சேர்வான்.

போலிமதி மறைய மின்னிப் பொதியுடு வகல வீறி
நலியிரு ளோடப் புட்க ணவிற்றிட விடியல் சூழ்முன்
வலிசெழு நிருதன் பாங்கர் வன்பசி தணியச் சென்று
பலியது வாவ னென்றே படர்ந்தன னமது பத்தன். ௨௦

நம்பாடுவார் நம்பியுட னவிறல்.

காலினுங் கடுகி யேகுங் கவினுடை யன்பன் றன்னை
வாலிய மதிய னென்றே மதித்தவோர் நண்ப னண்ணிக்
கோலிய விசையி னெங்ஙன் குறுகுவ தென்ன வன்ப
னேலியன் மொழிதந் தானவ் வேந்தல்கேட் டிறம்பூ துற்றான்.

நண்பவீ தென்ன விந்தை நரவிடக் கருந்துந் தீய
வெண்படு நிருதன் றன்னைக் கண்டதெவ் வுழிநீ தப்பி
மண்பொதி மறைத்தா ளெந்தை மாட்டெவ னுற்று மென்ன
விண்பொதி புகழான் பன்ன மேயினன் விளைந்த வெல்லாம். ௨௨

கோலமாய் வேலை தன்னுட் குளித்தவிப் புடவி மீட்ட
நீலமார் மேனி யெம்மான் குறுங்குடி நிமலற் போற்ற
வேலவே நியமத் தோடிவ் வெல்லியிற் போந்தேன் பொல்லாக்
காவனே ரென்னச் சால கடுங்கட னொருவ னோர்ந்து. ௨௩

பசியினி லயர்ந்தேன் பன்னாள் பகவனுன் றன்னை யிந்த
நிசியினிற் றந்தா னென்றே யுதரவெந் நெருப்ப விப்பான்
வசியெனுங் கூரெ யிற்று வாயங்காந் திடுதல் காணூஉ
வொசியுமுள் ளத்த னாகி யுவன்றனை யுவந்து நோக்கி. ௨௪

வாழுக வரக்க யானோர் வலிகெழு விரதங் கொண்டேன்
போழுத றவிர்த்தி மூன்றா நந்தைபோந் துளதிவ் வல்லி
னேழுயர் களிறட் டானை யெய்தியே பாடி மீண்டத்
தாழுத லின்றி நின்முன் சார்வலென் றுறுதி சொற்றேன். ௨௫

சாற்றலுங் கேட்ட வந்த நிசாசரன் சாந்த னாகிப்
போற்றுதல் செய்து மீண்டு வருகென்றான் பொறியெ னும்பேர்க்
கோற்றொடி மணந்த வையன் குறுங்குடிப் பிரானைப் பாடி
காற்றினுங் கடிது செல்வான் கடுகினே னிருதன் மாடே.

ஓதரு நிகம நான்கி னுட்பொரு ளானோன் றன்னைப்
போதனைக் கழுழு ளேந்தும் புரிமுசிப் பானோன் றன்னை
மேதக விருபா லுங்கொள் விமலனைக் கங்கை மேய
பாதனைப் பாடப் பெற்றே னரக்கன்பா லாக லுற்றேன். ௨௭

என்றிட நண்பன் கேளா விதுதவப் புதுமை யாவி
கொன்றுணு மரக்கன் கைப்பட் டுயிரது கொண்டா ரில்லை
துன்றுதேன்றுளிக்குங்குலைத்தொங்கலான்றொழும்புவாய்ப்பா
லின்றுயிர் பிழைத்தாய் மீட்டு மேகுவ தடாதென் றானே. ௨௮

கேட்டநம் பாடு வானென் கிளத்தினை நண்ப வீது
கேட்டலுங் கேட்டிற் கேது வாமிது கிளக்க லின்னே
வேட்டவென் யாக்கை யந்த விடக்குணு மரக்க னுக்கே
யூட்டுவ னன்றி மெய்யை யோம்புவ னல்லன் கண்டாய். ௨௯

பாவகற் கன்றி யிந்தப் பாரினுக் குணவ தாகுஞ்
சாவுறி லன்னை தானுஞ் சவமென வெறுப்ப தாகும்

---

(௨௫) மூன்றாநந்தை-ஏகாதசி. ஈண்ட-விரைய.

பூவினி லொருவ ரேனும் புரிந்திடாப் பொள்ளல் யாக்கை
யாவதீ தொருவற் குண்டி யாமெனிற் புகழென் றன்றாய். ௯0

நாவினைக் காவார் பல்ல நன்மைகள் புரிந்தா ரேனுஞ்
சேவினைத் தழுவு மெம்மான் றிருவுள முகப்பிப் பாரோ
சாவினைத் தலைசு மந்த தனுவிது புரத்த லாலே
வீவதின் ருகிச் சின்று ளாயினு மேவ வற்றே. ௯௧

தவமது குறித்தேற் கீது சால்பல விங்ங னென்மு
னவமதி யுரையல் வாழி யகலுதி யெனலு நண்பன்
றவமகிழ்ந் தைய வுன்றன் றகைமையை யுணர கில்லா
திவணிது புகன்றே னம்ம வென்றுநீ வாழ்க மன்னே. ௯௨

துரும்பென வாவி யுன்னுந் தூயவ ஞெய் மாயோ
னரும்பதங் காணி கொண்டா யாருனை யசிப்ப ரைய
விரும்பிய வாறே நிற்கு விடைபக ராக்கன் ருனு
மிரும்பவ மிளிர்த்து வான மெய்துமென் றேகினனே.

கலிவிருத்தம்.

சாந்தரம் பாடுவான் சஞர்த்த னைத்தொழாப்
போந்தமை புகன்றனம் பொருவி லந்தணீர்
காந்துமப் பிரமராக் கதன டைக்கலஞ்
சார்ந்தமை தெரிக்குதுந் தகையிற் கேண்மினே.

குறுங்குடிப்பிரானை வழிபட்டுமீண்ட வத்தியாயம்

முற்றிற்று.

ஆகச்செய்யுள்-௨0௪.

(௯௨) மிளிர்த்தல்-அழித்தல்.

## ஆறுவது

## பிரமராக்கதன்

## சரணாகதியடைந்த வத்தியாயம்.



### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

*கலவமா மயிலஞ் சாயற் காசினி மடந்தை சேட்டி*
*சிலவுரை பகர்ந்த நண்பன் பிறனெனச் சிந்தை செய்யல்*
*சுலவுபா ரறிய வன்பன் றூாநல முணர்த்த வேண்டி*
*யிலவெனு மிதழா யாமே யிவ்வண மாடல் செய்தேம்.* க

*மின்னெனு மிடையா யன்பன் வேகமா யதர்க ழித்துச்*
*சொன்னசொற் றவறு துற்றுச் சொரிகனற் கண்ண ளாகித்*
*துன்னிய நிருதற் காணூஉச் சொலற்கரு முதவி செய்தோய்*
*முன்னுரை தந்த வுன்றன் மொழிப்படி வல்லை போந்து.* உ

### நம்பாவோர் தம்மையுண்ணென வுரைத்தல்.

### கலிநிலைத்துறை.

*மாலை யந்துழாய் மருமனை யிமிழ்திரை யமுத*
*வேலை மீதினில் விடதரத் தறிதுயின் மேவுங்*
*கோல மேவிய கொண்டலை யம்புயை குலவு*
*நீல மாமலை நிகரனைக் குறுங்குடி யவனை.* ௩

*வாத மேதரு மாயனை நேயனைக் குடங்கொள்*
*பரத மாடிய பகவனைத் தகவினிற் பாடி*
*விரத முற்றிமீண் டேற்றனன் விளம்புமென் னுரையைச்*
*சரத மாகவே நம்புதி யென்றிது சாற்றும்.* ௪

*தொடர்கு ழும்பிட வாட்டுநின் பசிப்பிணி குலையப்*
*படரு ழக்குமென் னுடலினைத் தனித்தனி பகிர்ந்தே*

படரு மூனைலா மருந்தியே யரத்தநீர் மாந்திச்
சடர வங்கியைத் தணிக்குநி துணிக்குநி தக்கோய். ௫

கால நோக்கிடுங் கூற்றுவ னெருத்தினிற் காத்துச்
சால நிற்கவு மெனதெனக் கொண்டனன் றமியே
னீல மாயலை நேர்பவ னினக்கிது வுடல
மேலின் மேலவ னுருவ னிசைமதி யென்றான். ௬

## அரக்கன் நம்பாடுவோரை அருமைபாராட்டல்.

இன்ன வாறுரை யன்பனை நிருதனே றிட்டுப்
பன்று வாறுன்றன் மெய்யினைப் பொய்யெனப் பார்த்தா
யென்ன வாழ்த்துகே னென்னென வியக்குவே னின்னைச்
சொன்ன வாயினைக் காத்தனை யேத்தருந் தூயோய். ௭

மூகை யாயின னின்றிற மொழியவொன் றுணரே
னேக நாயக னன்றிநின் சீரெவ ரிசைப்பார்
நாக வேந்தனு மோர்புடை நவிற்றவல் லாரே
லூக மிக்கிலாச சீவரோ வுரைக்கவல் லுநரே. ௮

நீச னாயினை பிறந்தையி னெறியினி னேடி
யீச னாயினை யிலக்கென வுனக்கெவ ரெய்ப்பர்
ஓசி யென்பயன் பெற்றனர் தேவராய்ச் செனித்தோர்
பூசை செய்திடத் தக்கவோர் பூசுர னீயே. ௯

அறமு மெய்ம்மையு நின்வயி னோங்கிட வறிந்தே
னறமு மெய்ம்மையு நீயெனக் கையமொன் றின்றாற்
றிறமு றும்பெரி யோயுன தருட்செய றேற
வுறும தித்திற மில்லவ னென்னென வுரைக்கேன். ௰

அஞ்சி னேனுன்றன் சத்திய விரதத்தை யறிந்தே
னஞ்சு மாறுறு மாயவ னெனவுனை மதித்தேன்
செஞ்சொ லாயுனைச் செருத்திட நினையவுங் கில்லே
னுஞ்ச வாயின யானுமென் குடியுமென் றுரைத்தான். ௧௧

(௭) வாய-வாயமை.

## நம்பாடுவார் தம்மையுண்ணத் தவவலியுறுத்தல்.

என்று பற்பல படித்தெடுத் தேத்திட நிருத
னென்று கேட்டநம் பாடுவா னரக்கனை நாடிச்
சொன்றி யானிறை தோற்பொறை யினைச்சுமை யென்ன
வின்றி கந்தனன் கான்றசோ றிகக்குமா போல. ௧௨

### எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கடிநா யகயா துநினைந் தனைமுன் கரைதந் திடுவஞ் சினவார்த்
தையினே, படிமீ துபவக் குவைவிட் டொளிரும் படிமத் தனெனக்
கருதே லிவணீ, கடியா தெனதாக் கையையுண் டுகெடும் பசியைக்
களைவுற் றிடுமே துவில்யா, ஞெடிவாய் மையைக்காத் திடல்வேண்
டுமெனு நோனு துபுகழ்ந் துரையா டினனால். ௧௩

அவ்வா றுரையா டியவன் பன்மொழி யதுகேட் டலுமார் வமிகப்
பெருகி, யிவ்வா றுபிரா ணனையென் னிபம்விட் டிடுவா னினியெண்
ணலையெண் ணளவு, மெவ்வாழ் வையுமெய் துவதற் குரிய விம்மா
றுடவாக் கையினெவ் வளனுந், துவ்வா நெடுநா ளினிவா ழியயான்
சொல்லுந் திறமேற் குதிநூ யவனே. ௧௪

அரிதா முடலெற் கருளுந் தகையின் னமலன் னிமலன் னதுலன்
மதுபம், வரிபா டுமலர்க் கமலத் தவள்வாழ் மருமன் பெருமன்
னவர்சூழ் தருமிப், புரிமே வியுகந் திடுமெம் பெருமான் பொறிமான்
விழைபொன் மயமான் கவர்வான், பொருகா னநடந் திடுநா ரணனைப்
போற்றும் பலமெற் கருளென் றனனே. ௧௫

யான்முற் றிடமோ டிசைசொற் றிறமு மிசைவுற் றதினே
வுநினிங் கிதமு, மேண்முற் றிடநீ நினையா துவறி தியலா தனவோ
தியிளைத் திடுதி, வான்முற் றமதிற் றிரிமா மதியை மகவொன் றிவறி
மிகவா டல்பொருஉங், கான்முற் றிடுவோய் விழைவீ தெனவே
கழறுற் றிடவன் னவன்பன் னுவனால். ௧௬

(௧௪) நிபம்-காரணம்.

## இராக்கதன் இசைப்பலனை யிரத்தல்.

### எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஆடமர் கடந்த வாழியந் தடக்கை யண்ணலா ரடித்துணை மறவாப் [தும்
பீடமர் பெரியோய் பேசுமென் னுரையா லிளகிலை நினதுளம் பெரி
பாடிடும் பயனை முற்றுமே யளிக்கும் பரிவிலை யேலதிற் பாதி
நீடிடா தருளி யெனதுயி ரோம்ப நினைகுதி யென்றன னிருதன். ௧௭

இசைத்தவை கேட்ட வன்பனீ தறைவா னரக்ககே ளேதுரைக்
கினுநின், னசைத்திற முற்று தென்றனைக் கொன்று நலிபசி யவித்
திடத் துணிவாய், தசைத்திற வுடலைச் சதமென நினையேல் சத்திய
மோம்பலே யன்றி, வசைத்தகை பயக்கு மிவ்வகை சிறிது மனங்
கொளே னென்னவே மறுத்தான். ௧௮

காழுறு முளத்த னிவனெனக் கறுத்துக் கடிபவ னெனக்கனற்
பொறிகள், வீழுற விழித்து நோக்கியா னுரைத்த விதமுத விடநினை
யாயே, லேழுயர் களிற்று ளொன்றினை யட்டு மொன்றினுக் கருளியு
நின்றோன், வீழுறு நிலய நோக்கியேத் தெடுக்கும் வியன்றுதிப்
பலன்றனிற் பகுத்தே. ௧௯

ஒருவரும் யாம பலனளித் துனதில் லுகப்புட னுறுகவுன்
மகார்கள், வருவழி நோக்கி நிற்பரா லவர்கண் மனமுகப் பித்துன
தில்லின், பெருவள நுகர்க பேசிடு மென்சொற் பிழைக்கலை யென்று
ருத் துரைப்ப, வெருவரு முளத்த னுயெம தன்பன் மென்மொழி
யாலுரைத் திடுவான். ௨௦

உறுதியைக் காக்க வுரைத்திடு மிவற்றை யுள்ளுறத் தெரிகிலா
திங்ஙன், வெறுவிய புகன்று வேண்டிநின் றனைநீ விடியலு நேர்ந்தது
வீணிற், பெறுவதுந் தவிர்த்தி பெட்டவா றளிக்கப் பெறுகிலே னென்
னையுங் கெடுக்க, வுறுதிகொண் டிட்டா யுனக்கிது தகவ தெனவுளங்
கொண்டிட லுரவோய். ௨௧

வேட்டிடும் பலனிற் பாதியு மீய விரும்பகில் லேனென துடலை,
வீட்டியிந் நிலையி லுதிரநீர் பருகி விடக்கினை மிசைந்துன தாவி,
வாட்டிவா திக்கும் பசியினை யவிக்க மதித்திடென் றறுதியிற் கூறக்,
கேட்டிதவ் வரக்க னிவனிலை நன்று லெனமனங் கிளர்ந்திவை நினைக்
கும். உஉ

## அடியவர்மேன்மையை அரக்கனினைத்தல்.

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

சிலம்பி யதுவா யுமிழ்நூலைப் பின்னுந் தன்னுட் செறிப்பதுபோ
லுலம்பு கடல்சூ ழுலகுயிரைத் தோற்றி யொடுக்கு மொருவனடி
புலம்பு கலவா துள்ளிருத்திப் போதம் பூண்ட புண்ணியர்க [ரோ.
ணிலம்பொன் மடந்தை தமையென்றும் பொருளா வுன்னி னெகிழுவ

நுகரும் போக நிலைமையில வாகக் கழியு நோன்மை கண்டும்
பகரு மீனப் புந்தியுளோர் பரிவி னவையே நுகர்ந்திடுவர்
சுகரும் யோக முனிவரருந் தோலா மறையும் பழிச்சிடவே
திகழுங் கீர வுததிவளர் செம்ம லடியா ரவைசெய்யார். உ௪

தாமல் லாத யாக்கையைத்தா மென்றோர் தமதல் லாப்பொருளா
மேம மாதி தமவென்றோ ரிவரே முத்த ரெனப்படுவார்
காமம் வெகுளி மயக்கமிவை மூன்றுங் கலவா தம்மூன்ற
னாமங் கூடக் கெடுதலா னலிவற் றிருப்ப ரெஞ்ஞான்றும். உ௫

கடிசேர் கள்ளூற் றுவட்டெடுக்குங் கமலக் கோயில் வதியணங்கு
குடிசே ரகலத் தரிந்தமனைக் குறித்து வாழ்த்த லேவீடா
நொடிசேர் போழ்து தணத்தலுமே நவலொ ஞாத கொடுநரகாப்
படிசேர் காலத் துன்னுவரப் படிவர் தமினுஞ் சிறந்துளரேல். உ௬

தோடுவ தலவா மிருவேறு பற்றுந் தொடுவ ரோபெரியர்
விடுவ துவந்தே காலகதி வேண்டி நிற்ப ரதுநேரிற்
சுடுவ தொழிக்குந் தன்மையெனத் துறப்ப ரிவனு மந்நெறியிற்
படுவ துற்று னென்பசப்புப் பகட்டிற் படுவ னேபடான். உ௭

வீடு வேண்டு மெனுநினைவும் வெண்டா தெம்மான் விதித்தபடி
கூடு மென்றே யவன்குறிப்பைக் குறியா யுணருங் குணவாளர்
மாடு மனைவி மகவில்லம் வருந்திப் பெறுக வென்றிடினும்
பாடு பெறுவ தெனவிழைந்து பவத்து ளழுந்திப் பரிவாரோ. உஅ

மெய்மை யுணர்ந்த மேலவரை மேவிக் காணப் பெற்றாரு
மைய மறுத்த தவநெறியா லையன் பதமுற் றிடுவரென்ப
செய்ய விந்தத் தவனை யின்று சேரப் பெற்ற சிதடனுமே
யுய்யும் வழியைப் பெற்றிட்டே னுதற்கு யாதோ ருதாரணமே. உகூ

பாட்டுப் பயனை நன்குணர்ந்த பரம பத்த னிவனதனால்
வேட்டுப் பலகா லிரந்திடினும் விற்க விரும்பா தொறுக்கின்றான்
றேட்ட மில்லா னுயிரிடத்துஞ் செய்ய வுரையா னிவனடியே
யீட்டப் படுநற் பொருளாகு மெனக்கென் றுறுதி கொண்டனனே.

## அரக்கன் சரணாகதியடைதல்.

உய்யற் குதவு காலமிது வென்று தெளிவி னுணர்ந்தனனோ
லையற் கடிய னாயினனோ லாகூ ழின்றெற் கமைந்ததுவாற்
செய்ய நாளு மின்றெனக்குச் சேர்ந்த தாலிப் பெரியோனை
வெய்ய நெறியிற் கண்டிருந்த மேன்மை பெறுமென் றவமென்னே. ௩௧

ஒன்றே புரிய வேண்டுமென வுரைத்தா ருறுவ ரதுநன்றே
லின்றே யின்னே செய்கவென விறுத்தா ரினிநான் றாழ்க்ககிலே
னென்றே கண்ணீ ருற்றெடுக்க வெழுந்தா னடித்தா னிருநிலத்தி
னின்றே வீழு மரனென்ன நெடிதவ் வன்ப னடிவீழ்ந்தான். ௩௨

சிறியே னறியா தடிகடமைச் செயிர்த்தே யவம தித்தேனிக்
கிறியேன் பிழையுட் கொள்ளற்க கேடில் பதகன் பன்னாளாய்
வெறியே கொண்டு வெய்யனவே வேண்டு மளவும் புரிந்ததலாற்
குறியே னுய்யு நெறியொன்று மும்மா லுய்வான் குறித்தனனே. ௩௩

விரியு மன்பிற் றன்பதமே வேட்ட வர்க்கு மதுவிரும்பா
தரிய வுயிரைக் கொலைபுரியு மறிவி லார்க்கு மனந்தனெனும்
பெரிய பரியங் கத்தமரும் பெம்மா னருளும் பெற்றிமைபோ
லிரியு மன்பி னேற்குமரு ளீக வவனு வுமை நினைந்தேன். ௩௪

கோடிய னெனினு மும்மடியைக் குறிக்கொண் டேனுதலிலென்னைக்
கடிய வுளத்தி லுன்னற்க கடவு ளோர்க்கா வுறுகுறளாய்ப்
படியி னடந்து படிவேண்டிப் படியை யடியா லளந்திட்ட
மடிவில் கருணைக் குறுங்குடியெம் வரதற் பேணி யுகப்பித்தீர். ௩௫

பாகினினிய பாக்கடமுட் பறுவ லொன்றின் பயனுதவிச்
சேகு பெறுதீ வினையுடையேன் செனன மோயச் சிதைக்கவென்று
வாகு வினிலோர் யாழேந்தி மன்னு தொழும்பன் றனையுய்தற்
காகு நெறிதே ராகூழோ னன்பிற் றுதித்து வாழ்த்தினனால். ௩௬

கருணை ததும்பு நமதன்பன் கடியோன் றன்மை தனைக்காணூஉ
வருண கிரணத் தலர்கமல மன்ன வதனங் குளிர்ந்தினிய
பொருணன் கமைவாக் கினிலஞ்சேல் பொன்மா னுரத்தெம் மானிந்தத்
தருண மருளா வழங்கிடுவன் றறைவிட் டெழுதி யெனமொழிந்தான்.

எழுந்து பிரம ராக்கதனு மிருகை முகிழ்த்தே யெதிர்நிற்க
வுழுந்து முகூரத் துருள்பொழுதிற் குணவேற் றுமைநீ யுற்றனையா
லழுந்து மிந்த விழிபிறப்பை யடைந்த வகையே தறைதியெனக்
கழுந்து மனத்தோன் வணங்கியிது கழறத் தொடங்கி னனன்றே.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

உரமலி தவத்து மலியருண் முனிவீ ரோங்குநம் பாடுவான் றன்பாற்
றரமமை பிரம ராக்கதன் சரண்சேர் தகைமைபே சினமவற் கிரங்கி
வரமமல் கேச வனைத்துதி கான மகிமையாற் றெய்வத வடிவும்
பரமநற் பதமு மளித்தவை தானு மடைந்தமை பரிவினிற் பகர்வாம்.

பிரமராக்கதன்சரணுகதியடைந்தவத்தியாயம்

முற்றிற்று.

ஆகச்செய்யுள்—௨௪௬.

ஏழாவது

# நம்பாடுவார்

## கைசிகப்பண்ணாற் கதியடைந்த வத்தியாயம்.



### அரக்கன் முற்பிறப் புரைத்தல்.

கலிவிருத்தம்.

துதிம ணக்கு மலர்த்துள வோனடி
வதிவு றுத்தக மாமலர் மீமிசை
விதியி னிற்பரிந் தேத்தும் விரதியென்
கதிவ குப்பன் கருத்துற வேண்டுமால்.

சகர கோத்திரத் திற்சனித் திட்டனன்
மகர வேலை யுடைமடந் தைக்குநா
ளிகர தற்ற நெறியிலி யாகியே
பகர ரும்பெரும் பாரம தாயினேன்.

சோம சன்ம னெனும்பெயர் சூடினே
னோம நன்னெறி யொன்று மருவலே
னேம மென்றற மென்று மியற்றிலேன்
சேம மாய்ப்பிற் செறிநெறி பற்றிலேன்.

சூத்தி ரத்துந் தொகுகுலத் தும்பியன்
கோத்தி ரத்துங் குணங்கெடு நீசனே
னேத்து நன்மறை யோனென விங்குதித்
தாத்து மத்துக் கருநெறி தேடிலேன்.

## எ.—கைசிகப்பண்ணுற் கதியடைந்த வத்தியாயம்.

பூப கன்ம மியற்றிட வுன்னியே
தாப தப்பெரி யோருந் தமியனைக்
கோப மிக்குச் சினவக் கொடியவாம்
பாப காரிய மேபல செய்தனன். ௫

அன்ப கத்தி லமையா துலோபமு
மனப ரித்திடு மோகமு மன்னலா
னின்ப முற்ற வியற்றுமவ் விட்டியைத்
துன்ப முற்று முடிக்கத் துணி திலேன். ௬

ஊல மன்னயான் செய்யுமவ் விட்டியிற்
சூல மென்னுமோர் தோடந் துவக்கிற்று
கால நேர முடிக்குமுன் காலனார்
வேலி னுக்கு விருந்தென வீந்தனன். ௭

கடிம கத்தை முடிக்கலாக் காழிறு
லடிய னேனிவ் வரக்க வுருவினைப்
படியி ழிக்கப் பரித்தனன் பாவியேன்
றடிபு சித்துச் சரித்தனன் கானகம். ௮

என்ன புண்ணிய மெய்தின னோமுனை
மின்ன காட்டகத் தெய்தி யிருந்தனன்
சொன்ன வாய்மையைத் தோமற வாற்றிடு
மன்னை மானு முமையனு குற்றனன் ௯

நையைப் பற்றித் தகைந்தனென் கான்மல
ரைய விங்ஙன மன்பிற் பிடித்தனென்
பைய வேகவும் விட்டிலென் பாவியே
னையுந் தீவினை நாச முறுத்துவீர். ௧௦

இந்த மாயப் பிறப்பை யிரித்தெனை
யெந்த வாறு செயத்திரு வுள்ளமோ
வந்த வாற்றினி லாக்க வடியனேன்
சொந்த மாயினன் சோர விடுக்கலீர். ௧௧

காலைச் சுற்றிய காரி யரவது
வேல வோச்சினு மேகுரு தவ்வணைஞ்
சாலப் பற்றினென் சார்பிலி யேன்விடே
னூல மென்ன வகற்றிட லாளென்றான் ௧௨

### எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

துறையிரந்த வரக்கன்முகங் குளிர நோக்கிக் கோல்வளைவை தேகியுடன் கொடிய கான, நிறைமுனிவ ரகங்களிப்பச் சேவை யீவா னோர்செலீஇ யருளீந்த வெம்மைப் போற்றிச், சிறைமலிவெம் பிறவி யெனு நோயை வீத்துத் திகழ்ந்திடுநம் பாடுவான் செப்பு மாற்ற, நறைவழிந்து கடைகுழைந்து நெய்த்து நீண்டு நரலையயு நகுகூந்தா னன்கு கேட்டி. ௧௩

### நம்பாடுவார் அரக்கனுக் கநுக்கிரகித்தல்.

என்றவனி நங்கைமுக மினிது நோக்கி யெம்பெருமான் கூறிய வவ் விதநும் முள்ள, மென்றெளியை நோக்குமர விந்த மான வியம் பிடுவ னவ்வடிய னிராக்க தற்கூஉ, யொன்றுமுன தகத்தளர்வை யொழிவை யெம்மா னுபயபதக் குரிமைபெறுந் தொழும்ப னேனே யின்றுநின திழிபிறப்பை யொழிப்பல் யான்பா டியவிசையிற் பச்சிடு மென் றென்றுண் டாமால். ௧௪

அக்கிதத் தறைதருகை சிகமென் றேது மருஞ்சுரமொன் றுண்ட தனு லுறும்ப லத்தை, மிக்கிய விரும்பினனஃ தேயுன் பாவ வேரோடு வீட்டியருள் வீடு சேர்க்குந், தக்கோரு மெம்பெருமான் றனிநா மத்தின் சால்பினையித் தகைத்தென்னச் சாற்ற கில்லா ரக்கீர வாரியிலோ ரரியி னுளு மறிதுயில்சே ரரிதுகில னறிவ னன்றே.

எழிலியினைக் கண்டுவக்கு மஞ்ஞை நேர வெமைநோக்கி யகங் களிக்கு மேந்தி ழாய்கேள், பொழிலலைத்துப் புனலகத்திற் புரிந்து வாழ்ந்து போர்வேட்கும் பொறைத்தோளான் பொன்வில் லேந்துஞ் செழுமதிச்செஞ் சடையோன்றன் றிகிரி தொட்ட திண்டிறலோன் பின்னவனுக் கருளை நாமுன், வழுவறநல் கியதென்ன நமது தொண்டன் மாசறுதா னவற்கருளை வழங்கி னானே. ௧௫

ஏலஞ்சேர் கருங்குழல்கேட் டிடுதி நம்மு னெவரெனினுங் கைசி கப்ப ணினிதி னோதி, ஞாலஞ்சேர் கண்ணியர்த மாசை நோயா லலை யவிடே மலையமுத லடுக்க லிற்பல், காலஞ்சேர்ந் தருந்தவங்க ளாற்று வார்க்குங் கண்கூடாக் காணவொண்ணக் கதிய ளிப்பே, நீலஞ்சேர்ந் தொளிர்மேனிக் காலன் றானு நெடிதுபுகழ்ந் தேத்திடவே நிறுவு வோமே. ௧௭

அன்றியுமக் கைசிகத்தை யன்பி னோடே யறைந்திடுவோ னிவ் வடிய னரக்கன் றன்னை, நன்றிபெறச் செய்வித்த திறன தென்ன நண்ணினரைச் செய்விக்க வல்ல னவன், குன்றுகுவித் தேகோடு குயிற்றி வென்று குரைகடலிற் குரக்கினத்தைக் குழும வேவிக், கன்றுமனத் திராவணனைச் சுற்றத் தோடுங் காதியயாங் கரைந்ததுசத் தியங்கண் டாயே. ௧௮

கோம்பாடு நுண்ணிடைக்கோ மாதே நின்பாற் கூறியவிம் மாற்றமதி லையங் கொள்ளே, னம்பாடு வானரக்கற் கிரக்க மிக்கு நல்குபல னற்பாவ நாச மெய்தத், தம்பாடு தரிசனவே தியினு னிங் கித் தபனியமாந் தகைமையெய்கஞ் சார்ந்திட் டாங்குச், செம்பாடு பங்கிசெறி யரக்கன் றாய்தாஞ் செய்யதிரு வுருமேவித் திகழ்ந்திட் டானே. ௧௯

அல்லோடு பகைத்தறலை நரலை சேர்த்தி யம்போதி நிதமலைய வலைத்து நீலச், செல்லோடு தலைச்செய்து சைவ லத்தைச் சீதவனம் புகுத்திமிகக் கறுத்த கூந்தா, லெல்லோடு தலைக்காணு வகைவில் லாழி யேவியவெம் மடியவன்றன் சீரின் சீர்மை, சொல்லோடு சொல வெமக்கு மாகா வென்றாற் சொலவல்லா ரிவரென்னச் சொல்வா ரியாரே. ௨௦

வரத்தாலவ் வரக்கவுரு மாய்ந்த வன்னோன் மாசகன்ற வுளத்த னாய் மங்குற் காலத், திரத்தாலு மதியமெனத் திகழ்வுற் றன்பன் றுளிணையிற் சிரஞ்சாய்த்துக் குடந்தம் பட்டே, யரத்தாம்போ ருகத் தமரும் தடக்கை கூப்பி யருமருந்தா யென்பிறந்தை யகழ்ந்தாய்

(௧௧) கோ-பூமி.

போற்றி, தரத்தாலொப் பில்லாத தலைவ போற்றி சார்ந்தோரைத் தனி புரகருந் தலைவ போற்றி. உக

## அரக்கன் பரமபதமடைதல்.

என்றினைய வகைவணக்க முரைத்தே யந்த வேந்தெழிலா னமக்குரிய தொண்டு பூண்டு, நன்றுபல நாட்கழித்தே நம்மைச் சேவை நாடொறுஞ்செய் யியநமது நாடு சேர்ந்தான், குன்றுறழுங் குவிமுலையுன் றோடு நம்மைக் குறித்துநிதந் துதிபாடிக் கூத்து மாடித், துன்றுமிசை யோகியருந் துதிப்ப வாழ்ந்த தோமறுநம் பாடுவா னியல்பு கேண்மோ. உஉ

## நம்பாடுவார் திருநாட்டுக்கெழுந்தருளல்.

நீட்டரவின் சுமையன்ன வுலகிற் பன்னா டொன்முறையி னமைப்பாடித் துயிலு ணர்த்தி, வீட்டுறையு நித்தமுத்த ரெதிர் கொண் டேத்த விண்ணவர்கண் மலர்மாரி வீழ்த்த மாதர், நாட்டியங்க ளாடவுட னட்ட மேய நாகநா தன்முதலோர் நனுகி வாழ்த்தப், பாட்டிலடங் காப்பரம பதத்தி னம்மைப் பாடிடநம் பேரருளாற் படர்ந்தா னன்றே. உங

### கலிவிருத்தம்.

செம்மை நன்னிற் செறிந்த மதியினை
யம்ம வோர்புடை யன்ன நுதலினு
மெம்மை வேண்டி யிரந்தனை யாதலி
னம்மை நாடு மறங்க ணவிற்றுப. உச

இசையி சைத்துநம் மேர்புகழ் பாடுவான்
வசைய றுஞ்சீர் வகுத்தன மெவ்விதந்
நசையு றுந்தொழி லுந்நமக் கானவே
யிசைய வற்றுள மின்பமிக் கேய்க்குமால். உரு

தனுவின் முன்னுறுந் திங்களிற் றண்கதி
ரினிய தாய்வளர் காலையே காதசிப்

புனித மாய திதியுட் புரையறு
மனதி னெம்மை நினைத்தன் மருவியே. உசு

கரும மாதி கழன்று நமையலா
லொருபொ ருட்கு முளமிட முற்றிடா
தருமை சேர்நம தாலய மண்மியே
சிரமு றக்கரஞ் சேர்த்துத் தொழுதெழா. உஎ

பாடி நம்மை யுகப்பிப் பவர்களு
மாடி யத்தகைப பாட்டினைக் கேட்டபி
னோடி வாழ்த்து மவர்களு நம்மய
னீடி யென்று நிலவி யிருப்பரே. உஅ

ஆண்டு நம்மை யளவி யரியபல்
லாண்டு பாடியா னந்தத் திருப்பரால்
வேண்டு வார்கரு விழைகதி நல்குமீ
தீண்டு ரைத்தது சத்திய மேந்திழாய். உகூ

என்று கூறி யிருநில மாதக
நன்று வக்க நவிற்றின ரூரமேற்
றன்று மாலினிற் றேன்று மழவென
வன்றி ருந்தரு ளாழியங் கையனே. ௩௰

கலிநிலைத்துறை.

செங்க திர்க்குட திசையினிற் சென்றுழிச் சேத்தல்
பொங்கும் வானம தென்னவே பொலிந்தசெஞ் சடையீ
ரிங்கு மக்குநா மறிந்தவா றிக்கதை யிசைத்தேந்
துங்க மேயினீர் மேயினேன் யானுமத் தூய்மை. ௩௧

மிக்க மேன்மைய தாய்ந்தவர் வினவினோர் தம்மை
யொக்க மாவறச் சூழலி லுறுத்துவ தன்றி
யிக்கு நேர்சுவை யீவது கானவை பவத்தைத்
தக்க வாபுலப் படுத்துவ தரியது சாற்றின். ௩௨

